"THIS BOOK IS PUBLISHED WITH THE
FINANCIAL ASSISTANCE OF
TIRUMALA TIRUPATI DEVASTHANAMS
UNDER THEIR SCHEME
AID TO PUBLISH RELIGIOUS BOOKS".

# தாருகேசரந்தாதி



முனைவர். **இராம. சிதம்பரம்**
எம்.ஏ.,எம்.ஃபில்.,பி.எட்., பிஎச்.டி.,
தமிழ்ப் பேராசிரியர்,
அடைக்கலமாதா கல்லூரி,
வல்லம் - 613 403,
தஞ்சாவூர்.





வெளியீடு
மும்மகள் பதிப்பகம்
விண்ணமங்கலம் -613 602
தஞ்சாவூர்.

முதற் பதிப்பு : ஜுலை 1999
எண்ணிக்கை : 2000

பதிப்புரிமை : சி.மலைமகள் D.E.C.,
விண்ணமங்கலம் - 613 602
தஞ்சாவூர்.

விலை : ரூ. 28/- 20

கணிப்பொறி வடிவம்:
கணேஷ் கிராபிக்ஸ்,
மாமாசாகிப் மூலை,
1096, கீழவீதி,
தஞ்சாவூர்.

அச்சிட்டோர் :-
வெற்றிவேல் அச்சகம்
தஞ்சாவூர்.

தமிழ்கூறு நல்லுலகில்
தமிழுக்குத் தொண்டு செய்து
தமிழாலே தாம் வாழ்ந்த என் *மூதாதையர்க்கும்,*
தமிழ்நலம் பேணும் நோக்கில்
தரணியை நோக்கும் போது
உள்ளத்துக்கு உரமூட்டி ஊன்றுகோலாய் நின்று
ஊக்கமும் ஆக்கமும் தந்த
இனிய *மாணாக்க* உள்ளங்களுக்கும்

***காணிக்கையாக***

இந்நூலைப் படைப்பதில் களிப்படைகின்றேன்.

# வாழ்வுக்கு......

பொருள்சேர் பெருவாழ்வு போழ்தும் மலர
இருள்தீர் மதிபெருக இயைந்த பசியால்
அருள்சேர் தமிழ்த்தேனை அள்ளிப் பருகக்
கரிமுகத் தானவன் காப்பு

வளம் தரும் நலம் தரும் பயமறும் உயர்வுறும்
பலம் தரும் பகையெதிர் துணிவுறும் உயிர்வரும்
நலம் தரும் நாயகன் பராய்த்துறை யான்அருள்
நிலம் தரும் தினம்தொறும் இலையெனா தீதற்கே!

எந்தையவர் எனக்களித்த இயற்கைத் திறனுடனே
தந்ததமிழ்த் தாயவளின் தனியாற்ற லோடிங்கே
அந்தாதி யாயமைத்துப் பாடிடமுன் வந்துள்ளேன்
முந்தையரே காக்கமுன் னின்று.

அருமறைகள் தரும்பொருளைஆய்ந்தறிந்தே அப்பொருளை
அருவுருவப்பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பேர்சொலியே
உருகி ஒளிபரப்புகின்ற மெழுகினைப்போல்தம்முடலை
ங்கி உலகிற்குணர்த்தும் சான்றோரை வணங்குவமே!



# நன்றி

பொருளல் லவனைப் பொருளாகச் செய்யும்
திருமலையார் தந்த பொருள்



தாருகேசர் அந்தாதி
என்னும் இந்தநூல் வெளியீட்டிற்குரிய
திருவருளும் பெரும்பொருளும்
(ஏறத்தாழ 65 விழுக்காடு) வழங்கிய
**திருப்பதி திருமலை தேவஸ்தானத்தார்க்கு**
உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

''நன்றி கொன்றார் நாட்டிற்குதவார்''

இராம. சிதம்பரம்

## அன்னைத் தமிழுக்கு

மூத்தவளே முயல்வார்க்கு நலமளிக்கும்
முன்னவளே ! முடியேற்ற மூவரசும்
காத்தவளே ! கற்பகமே ! கலையுருவே !
கண்ணவளே ! கண்ணறிந்தார் கயமைதனை
நீத்தவளே ! நிலைத்தவளே ! நிலம்புகழும்
பெண்ணவளே ! நெஞ்சறிந்தார் நினைவினிலே
பூத்தவளே ! பொன்மகளே ! பொன்னிறத்தின்
பூமகளே ! போற்றியருள் தாமகளே !



## அண்ணனுக்கு

வராத வழிசென்று வானவரைச் சேர்ந்த
**இராமகோ விந்தசாமீ** ! யாரும் - பெறாத
பெரும்பேற்றைப் பெற்றனையே ! தெய்வமாய்
நிற்பாய்,
கருத்துடனே எங்களைக் காத்து.

# முகவுரை

பற்றுதலே பற்றாயின் பற்றறுப்பான் பற்றில்லை
பற்றகற்றிப் பற்றி விடற்கு

உலகப் பொருள்களை விரும்புதலை மட்டுமே தம் கொள்கையாகக் கொண்டிருப்பாராயின் அவர்களுடைய தீமை களைப் போக்கி அருள்புரிந்து ஆட்கொள்ள, ஆசைகளைக் கடந்தவனாம் இறைவனுக்கு மனத்தில் எண்ணம் உண்டாகாது என்னும் பேருண்மையை அறியாதார் இவ்வுலகில் படும் இன்னல்கள் பலப்பல. இன்றைய உலகில் நடைபெறும் சமுதாயக் கொடுமைகள் பலவற்றுக்கும் அடிப்படையாதெனில் இறையச்சம் இல்லாமையே. ஆன்மீகம் தழைத்திருக்கும் இதயத்தில் அல்லவை தோன்ற வாய்ப்பிராது. எப்போதும் இறைவனைத் துதிக்கும் நாவினால் தீயவை பேசும் நிலை ஏற்படாது. மகேசுவரச் சிந்தனை குறையக் குறைய மனிதக் குற்றங்கள் பெருகும்.

சங்கப்பாக்கள் யாவும் மாற்றுக் குறையாத சமுதாயப் பாக்கள் என்று எழுதுவதில் முனைவர். வ.சுப.மாணிக்கனார் கழிமகிழ்வெய்துவர். தமிழ் மொழியின் இலக்கியச்சிறப்பு அளவிடமுடியா மேன்மையுடைத்து. பழங்கவிஞர்களில் சிலர் கடவுள் வாழ்த்து பாடிப்பின் பணிமேற்கொண்டனர். ஆன்மீக இலக்கியங்கள் படைப்பதில் பெரும்பான்மையோர் கருத்தூன்றினாரல்லர். பின்னர் அருந்தமிழாலே ஆன்மீகம் தழைக்கத் தொண்டு செய்தவர்கள் சமயக்குரவர்கள்.

இறைவனின் திருவருள் கிடைக்கப்பெற்றால், உயிர்கட்குக் கருதிய யாவும் கைகூடும். மக்களுக்கு நேரும் பிணியும் துன்பமும் அவரவர் வினைப்பயனால் விளைபவை; ''தீதும் நன்றும் பிறர்தரவாரா'' என்று புறப்பாட்டு கூறும். வினைப்பயனின் வெங்கொடுமையினின்று விடுபடவும் கொடுமையின் தன்மையைக் குறைக்கவும் மானிடர் ஆண்டவன் அருளை நாடுதல் வேண்டும். இங்ஙனம் இறையருளுக்கு உரியவராகி நன்மைகள் பெறுதற்கு எளிய

வழிகளை இயம்பியவர்களே சமயச் சான்றோர்கள். சான்றாகத்,

" திருநெறிய தமிழ்வல்லவர் தொல்வினை
தீர்தல் எளிதாமே"

என்ற திருஞான சம்பந்தரின் திருவாக்கினால் உணர முடிகிறது. நாட்டில் இறைநாட்டத்தைத் தெரிவிக்கின்ற மிகுதியான சிற்றிலக்கியங்கள் தோன்றலாயின. வடிவாலும் வகையாலும் சிற்றிலக்கியங்கள் எனப்பெயர் பெற்றிருப்பினும் பெருமையாலும் சிறப்பாலும் இவை பேரிலக்கியங்களாகவே கருதத்தக்கன. காப்பிய அமைப்பினைக் கொண்டவற்றைத் தவிரப் பின்எழுந்த ஏனையன சிற்றிலக்கியங்களேயாம். கலம்பகம், தூது, பள்ளு, பரணி , அந்தாதி, உலா, குறவஞ்சி, பிள்ளைத்தமிழ் போல்வனவும் பிறவும் இவ்வகையின் பாற்படுவன. இவற்றுள் அந்தாதி பாடி ஆண்டவன் அருள் நாடினார் பலர். ஏறத்தாழ நானூற்றுக்கும் மேற்பட்ட அந்தாதி நூல்கள் இது காறும் வெளிவந்துள்ளன என்பது வெளிப்படை.

அந்தாதி என்றால் சமய உண்மைகளை உணர்த்தும் ஒரு சொல் என்பர். சிவன் மீது பாடப்பெற்றதே தாருகேசர் அந்தாதியாகிய இந்தநூல். 'உலகம் அழிவதில்லை; தோன்றுவதில்லை; எப்போதும் நிலைத்திருப்பது. ஆதலின், உலகை ஆக்கவோ அழிக்கவோ கடவுள் தேவையில்லை' என்று சிலரும், "உலகம் அவன் அவள் அது என ஆகி நிற்கிறது", இவையெல்லாம் நாளும் அழிவதும் உண்டாவது மாக நடைபெற்றுக் கொண்டேயிருப்பதால் கடவுள் தேவையே என்று பலரும் இயம்புகின்றனர்.

"எந்தாய் அருளென் ஓர் இளங்குமரன்
அந்தாதியை ஏத்தலும் ...."

என்று கந்தபுராணத்தில் பகரப்படும் அந்தாதி என்பது முதலும் முடிவுமான பொருளாம் இறைவனைக் குறிப்பதாம். இவ்வுலகிற்கு அந்தத்தைச் செய்பவனே ஆதியையும் செய்யும் ஆதியாவான் என மெய்கண்டதேவ நாயனாரும், "அந்தம் ஆதிஎன்மனார் புலவர்", எனச் சிவஞான போதமும் உணர்த்துகின்றன.

அந்தாதி என்பது கடவுள் பெயராயும், இலக்கிய வகையாயும் கொள்ளலாம். முதல்செய்யுளின் அந்தம் அடுத்த செய்யுளின் ஆதியாய் வருதல் அந்தாதி எனும் செய்யுளமைப் பாகும். அந்தாதி நூல்கள் பெரும்பாலும் வெண்பாக்களாலோ, கட்டளைக் கலித்துறைப்பாக்களாலோ அமைந்திருந்தன. குறிப்பாக நூறு பாடல்களால் ஆன அந்தாதிக்கு,

''நூறு வெண்பா நூறு கலித்துறை கூறுதல்
நூற்றந்தாதிக்கோளே... ''

என்று இலக்கணவிளக்கப்பாட்டியல் நெறி வகுக்கும். இந்தநூலும் நூறுபாடல்களைக் கொண்டுள்ளது. அந்தாதி நூல்கள் விருந்து என்னும் வகையானும் இயற்றப்பெறலாம்.

''விருந்தே தானும் புதுவது கிளந்த
யாப்பின் மேற்றே''

என்னும் தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பாவில், ''புதுவது கிளந்த யாப்பின் மேற்று'' என்பது என்னையெனின் புதிதாகத் தாம் வேண்டியவற்றுள் பல செய்யுளும் தொடர்ந்து வரச் செய்வது, அந்தாதிச் செய்யுள் என உணர்க'' என்ற பேராசிரியரின் உரையின் வழி அந்தாதி என்னும் பிரபந்தம் விருந்து என்னும் வகையினாலும் இயற்றப்பெறும்.

''தாருகேசரந்தாதி'' என்னும் இந்தநூலில் முதலில் உள்ள தொண்ணூறு பாடல்கள் கலிவிருத்தங்களாகவும், ஏனைப் பத்துப் பாடல்கள் அறுசீர் ஆசிரியவிருத்தங்களாகவும் அமைந்துள்ளன. மேலும், பாடல்களுக்கு எளிய விளக்கமும் தெளிவும் கொடுக்கப்பெற்றுள்ளன. ஆன்மீக இலக்கியமாதலின் சில இடங்களில் வடசொற்களும் இடம் பெற்றுள்ளன.

மக்களிடம் ஆன்மீக உணர்வுகளும்,தமிழ் மரபுச் செய்யுள்கள் மீதுள்ள பற்றும் மங்கிமறைந்து போகாதிருக்க அடியேனின் இந்த முயற்சி சிறு அகல் விளக்காகவேனும் பயன்தரும் என்ற நம்பிக்கையை என்னுள் ஏற்றிய எந்தைக்கும், இரவலனாய் நின்ற எளியேனுக்கு இலக்கணப் பசிபோக்கிய ஆசிரியப் பெருமக்களுக்கும், தளர்நிலை

கண்டுவளர்நிலை கூறிய இனிய நண்பர்கள் விண்ணமங்கலம் பால.செழியன், குமிழக்குடி இளமுருகு, குலோத்துங்கன் ஆகியோருக்கும், இந்த நூல் வெளியீட்டில் சிறந்த ஈடுபாட்டைக் காட்டிப் பேருதவி செய்த தஞ்சாவூர்த் தம்பி பெ.பிரதீப் வேதா அவர்க ளுக்கும், தம்பியாய், நண்பனாய்த் தலைவனாய் நின்று என்னை ஊக்கிய சென்னை கோ.தி.கருப்பசாமி அவர்களுக்கும் நன்றியறிதலையுடையேன். விண்ணமங்கலம் ஒய்வு பெற்ற ஆசிரியர் திரு. கு. தங்கையன் அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

குறிப்பாகத் தாருகேசரந்தாதி என்ற இந்தத் தெய்வீக நூலைப்பல்லாற்றானும் ஊக்கம் தந்து பாராட்டிய வல்லம் அடைக்கலமாதா கல்லூரித் தாளாளர் திரு. டாக்டர். அ.அருணாசலம் அவர்களுக்கும் பேராசிரியப் பெரு மக்களுக்கும், அண்ணனாய் ஆசிரியராய் இருந்து ஆளாக்கிய திருவையாறு அரசர் கல்லூரி முன்னாள் முதல்வர் பேராசிரியர்.க.கலியபெருமாள் அவர்க ளுக்கும் நன்றியுடையேன். சிறப்பான முறையிலே கணிப்பொறி அச்சில் உருவாக்கி வெளியிட்டுப் பேருதவி செய்த தஞ்சாவூர் வெற்றிவேல் அச்சக உரிமையார் திரு. ப. இராமகிருஷ்ணன் .திரு.ப.அப்பர், அவர்களுக்கும், நன்றியுணர்வை வெளிப்படுத் துவதில் பேருவகை அடைகிறேன். கணிப்பொறிவழியே கவின் வடிவம் தந்த கணேஷ்கிராபிக்ஸ் நிறுவனத்திற்கும் என்றும் நன்றியுடையேன் .

இராம. சிதம்பரம்

# அணிந்துரை

பேராசிரியர். **பி. விருத்தாசலம்**, *முதல்வர்*
நாவலர். ந.மு. வேங்கடசாமிநாட்டார் திருவருள் கல்லூரி,
தஞ்சாவூர்-613 007

தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள வல்லம் என்னும் பேரூரில் அமைந்திருக்கும் அடைக்கலமாதா கல்லூரியில் தமிழ்த்துறை விரிவுரையாளராகப் பணிபுரிந்து வரும் முனைவர். இராம. சிதம்பரம் அவர்கள் தமிழ்நாட்டு மண்ணின் மைந்தர்; தமிழ் கற்றார் மரபில் தோன்றியவர்; தமக்கு வாழ்வு தந்தவர்களை அன்புடன் நினைவு கூர்ந்து நன்றிபாராட்டும் நற்பண்பினர்; ஆதலின், முன்னர் தாம் தமிழாசிரியராகப் பணிபுரிந்த திருப்பராய்த்துறை என்னும் திருத்தலத்தின் பாலும், அங்குக் கோவில் கொண்டு எழுந்தருளியுள்ள பசும்பொன் மயிலாம்பிகை உடனுறை பராய்த்துறை நாதர் மீதும் கழிபெருங்காதல் கொண்டு தாருகேசர்அந்தாதி என்னும் இந்நூலை எழுதியுள்ளார்.

இந்நூலாசிரியர் மணிவாசகப் பெருந்தகையால் பக்திச் சுவை நனிசொட்டச் சொட்டப் பாடப்பெற்ற திருவாசகம் போன்ற நுல்களை ஈடுபாட்டுடன் படித்துச் சுவைத்து,அதில் ஊறித் தோய்ந்த மாண்பினராதலின் படிப்போர் உள்ளத்தைப் பாகாய் உருக வைக்கும் பான்மையில் நூறு பாடல்களைப் பாடி இந்நூலை நிறைவு செய்துள்ளார்.

முதல்பாடலின் இறுதி எழுத்தோ, அசையோ, சீரோ அடுத்த பாடலுக்கு ஆதியாகப் பாடப் பெறுவதே அந்தாதியாகும் முன்னை வெளிவந்துள்ள அந்தாதி நூல்களின் மரபையும் தாங்கி இந்த நூல் அமைக்கப் பெற்றுள்ள சிறப்பு பாராட்டுக்குரியது. பாடலுக்குப் பொருள் இதுவோ, அதுவோ என்று படிப்பவர் மயங்காத படிக்கு நூலாசிரியரே தாம் இயற்றியுள்ள பாடல்களுக்குப் பொழிப்புரையும் தெளிவுரையும் வழங்கியருப்பது இந்நூலின் சிறப்பாகும்.

தமிழ் இலக்கியப் பெருங்கடலில் எத்துணையோ

புராணங்கள் உள்ளன. அவற்றில் கூறப்படும் கதைகள் கற்பனையாயினும் மிகச் சிறந்த வாழ்வியல் உண்மைகளை எடுத்துரைப்பன. நம் நூலாசிரியர் ஓர் ஆசிரியர்; உடையார் முன் இல்லார் போல் ஆசிரியரிடம் மாணாக்கர் பணிந்து நின்று பாடங்கேட்க வேண்டும் என்று விரும்புபவர். அதனால் சுவாமிமலையில், சிவபெருமான், முருகப் பெருமானைப் பணிந்து நின்று ஓம் என்னும் பிரணவத்தின் உட்பொருளைக் கேட்டுணர்ந்தார் என்னும் கதையைக் கருவாகக் கொண்டு,

"ஓமென்னும் மந்திரத்தின் உட்பொருளை உணர்த்தற்குத்
தாமன்றே ஏரகத்தில் தமிழ்க்குமரன் தன்னிடத்தில்
கீழமர்ந்து கேட்டிட்டாய் பாய்த்துறைப் பாங்கனே
யாமுன்னைக் கேட்பதெல்லாம் யாவினையும் நீங்குதற்கே!"

என்னும் பாடலைப் பாடியுள்ளார். அப்பாடலுக்குக் கீழ்க்காணும் தெளிவுரையும் வழங்கியுள்ளார்.

" உடையார் முன் இல்லார்போல் பணிந்து கற்றலையும் தம்மின் தம்மக்கள் அறிவுடையாராய்த் திகழப் பெற்றவர் விழைதலையும் உலகவர் உணரப் பரம்பொருள் முருகனிடம் பாடம் கேட்டார்."

காவிரியின் தென்கரையில் அமைந்துள்ள திருப்பராய்த் துறையில் இறைவன் எழுந்தருளியிருப்பதையும் தண்ணீரில் தாமே இறங்கி நாள்தோறும் நீராடாமல் இருப்பதனையும் தற் குறிப்பேற்றம் என்னும் நயம்பட,

"வாரிவளம் இருமருங்கும் வழங்கிவரு பொன்னியதன்
நீரில் நீர் இறங்கிவிட்டால் நீள் சடையில் வீற்றிருக்கும்
சீரியவெண் பிறைமதியும் செஞ்சடையின் நீங்கிடுமென்று
ஓரினிய பயத்தாலோ தென்கரையில் நிற்கின்றீர்."

என்று பாடுகின்றார்.

சான்றோர் புதிய இலக்கியங்களைப் படைக்கும் போது முன்னோர் பாடிய பாடல்களின் பொருளை மட்டுமன்றி அப்பாடல் அடிகளை அப்படியே எடுத்துத் தம் பாடலின் இடைவைத்துப் பாடுவதும் மரபாகும்.

அம்முறையில் கற்றவர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்புகிட்டும் என்னும் பொருளில் திருவள்ளுவர் பாடிய

"யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு"

என்னும் குறட்பாவைக் கொண்டு,

"யாதானும் நாடென்றும் ஊரென்றும் அன்று செந்நாப்
போதாரும் சொன்னாரே புவிமாந்தர் உளங்கொண்டால்
வாதாடும் நிலைமாறும் வழக்கெல்லாம் கலைந்தோடும்
தீதோட்டிப் பாராளும் திருப்பராய்த் துறைநாதா! "

என்று பாடியிருப்பது பாராட்டத்தக்கதாகும்.

தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் வெளிப்பட்ட ஆலகால நஞ்சுண்டு அனைத்து உலகங்களையும் காத்த சிவபெருமானே! நீ விரைந்து வந்து எனக்கு நல்வாழ்வு கொடு;இல்லையேல் ஆலகால நஞ்சினை எனக்களித்து என்னைக் கொன்று விடு என்று வேண்டும் (பாடல் -10)இவரது அன்பும் ஆற்றாமையும் சருங்கல் மனத்தையும் கரைக்க வல்லவை. திருவையாற்றுக்கு ஓடிவந்து திருநாவுக்கரசருக்குத் திருக்கயிலாயக் காட்சியைக் காட்டினாயே! துணை யாரும் இல்லாத கிழவி தந்த பிட்டுக்காக வைகை ஆற்றின் அடைப்பை அடைக்க மண்சுமந்தாயே! அப்போது பாண்டியன் பிரம்பால் அடித்ததையும் தாங்கிக் கொண்டாயே! கவனிப்பார் இல்லாமல் வாடும் என் குறையை மட்டும் கண்டுகொள்ளாமல் இருக்கிறாயே! இது தகுமா?

"வாக்கீசர் தம்பொருட்டு வந்தனை ஐயாற்றுக்குத்
தூக்கினைமண் பிட்டுக்குத் துணையற்ற கிழவிக்காய்த்
தாக்குண்டாய் பிரம்பாலே தமிழ்க் கூடல் மாநகரில்
போக்கற்றுக் கிடக்குமென் குறைமட்டும் காண்கிலையே! "
(பாடல்-11)

என்னும் நூலாசிரியர் வினாவுக்கு விடைகூறாமல் இறைவனால் இருக்கமுடியுமோ ?

நாட்டுமக்கள் அனைவருடைய துயரையும் நீக்குதற்காக நாடாளும் தலைவர்களுக்கு நல்வழி காட்டும் படி இறைவனை வேண்டிக்கொண்டு கவிஞர் பாடும் பாட்டு வருமாறு:

''கேட்டார்க்குச் கேட்பொருள் கேட்டவுடன் தருகின்றாய்
வேட்டார்க்கு வீடளிக்க வீடுவரை வருகின்றாய்
நாட்டார்க்குப பொறுப்பேற்று நலம்பெருகும் ஆட்சிசெய
மாட்டார்க்கு நெறியூட்ட மனங்கொள்வாய் தாருகேசா!''

என்று மனமுருகிப் பாடும் இவருடைய பொது நோக்கு போற்றுதற்குரியதாகும்.

இவ்வாறு தமக்கு அருள்புரிதலோடு வாடுகின்ள மக்கள் கூட்டம் வளமுடன் வாழ வகை செய்ய வேண்டுகின்ற நூலாசிரியரின் தூய நெஞ்சம் வாழ்க!

புற்றீசல்களைப்போல் புதுக்கவிதைகளை யாப்போர் பலராக வாழும் நம் நாட்டில் மரபு வழிக்கவிதைகளைப் பாட முன் வந்துள்ள நூலாசிரியர் முயற்சி சிறக்க வாழ்த்துகிறேன்.

(ஒப்பம்)

பி. விருத்தாசலம்

# தலவரலாறு

வான்பொய்ப்பினும் தான்பொய்யா வளமார்ந்த நதியாம் காவிரியின் தென்கரையில் திருமிகுபதியாய்த் திகழ்வது திருப்பராய்த்துறை. காவிரியின் தென்கரையிலமைந்து பாடல் பெற்ற 127 சிவத்தலங்களில் மூன்றாவது பெருமையுடைய திருப்பராய்த்துறையும் ஒன்று.

## ஊர் அமைவு

திருப்பராய்த்துறையின் வடபுறம் வற்றாத பொன்னியாம் அகண்டகாவிரி. தென்புறத்தே பசுமைக்குப் பெருமை சேர்க்கும் பயிரினங்களைத் தாங்கிய வயல்கள். இடையே இழைந்தோடும் இருதடங்கள் திருச்சி - கரூர் பேருந்து வழிச் சாலை, தொடர்வண்டிச்சாலை என்பன. திருச்சியிலிருந்து மேற்கே 16 கல் தொலைவில் திருப்பராய்த்துறை உள்ளது. மேற்கு எல்லையாய் இராமகிருஷ்ண குடிலும் கிழக்கு எல்லையாய் இராமகிருஷ்ண தபோவனமும் அமைந்து கடவுள் பணியும் கல்விப் பணியும் ஆற்றி வருகின்றன. இந்த அழகிய ஊருக்கு இதயமாய் அமைந்திருப்பது தான் தாருகாவனேசுவரர் ஆலயம்.

## பெயர்ச்சிறப்பு

தாருக விருட்சம் - பராய் மரம். பராய் மரங்கள் நிறைந்த இங்கே தவம் செய்து வந்த முனிவர்களின் ஆணவத்தை அடக்க இறைவன் பிட்சாடனர் வேடம் கொண்டு இம்முனிவர்களின் பத்தினியரை மயக்கினார். இவரையாரென அறியாமல் முனிவர்கள் வெகுண்டு இறைவனை அழிக்க யாகமியற்றி அதனின்று புலி முதலானவற்றை ஏவினர். இறைவன் புலியைக் கொன்று அதன் தோலை உடுத்திக் கொண்டார்; மானை இடக்கரத்தில் ஏந்திக்கொண்டார்; அரவங்களை அணிகலன்களாக்கிக்கொண்டார்; யானையைக் கொன்று அதன் தோலைப்

போர்த்திக்கொண்டார்; பூதகணங்களைத் தம் பணியாளராகக் கொண்டார்.

இந்நிலை கண்ட முனிவர்கள் ''இறைவனே''எனஉணர்ந்து ஆணவம் நீங்கி அடிபணிந்து வணங்கினர். இறைவன் மகிழ்ந்து காட்சி தந்தருளினார். இறைவன் தாருகாவனேசுவரர் இறைவி ஹேமவர்ணாம்பிகை.

இது பராய்மரங்கள் நிறைந்த திருத்தலமாதலின் திருப் பராய்த்துறை எனப்பெயர் பெற்றது. இறைவன் பராய்த்துறை நாதர் எனவும், இறைவி பசும்பொன் மயிலாம்பிகை எனவும் போற்றப் பெறுகின்றர். தாருகாவனேசுவரர் என்னும் திருப் பெயரைத் ''தாருகேசர்'' எனவும் வழங்கலாம்.

## திருக்கோயில்

இந்தச் சிவாலயம் கி.பி. ஆறாம் நூற்றாண்டில் இராஜகேசரி வர்மன் என்னும் சோழமன்னனால் கட்டப்பெற்றது. முதலாம் . இராஜராஜன், முதலாம் இராஜேந்திரன், மாறவர்மன் சுந்தர பாண் டியன், விஜயநகர வீர கம்பண்ண உடையார், கிருஷ்ணதேவ மகாராயர், விசுவநாத நாயக்கர் , திருமலை நாயக்கர் ஆகியோர் காலத்தில் திருப்பணிகள் நிகழ்த்தப் பெற்றுள்ளன என்பது கல் வெட்டுக்களால் அறியலாகின்றது.

நாளடைவில் பழுதடைந்த இந்தக் கோயிலைக் கானாடு காத்தான் இளையான்குடி மரபினரான சிவ. வீர. நாகப்பன் செட்டியார் 3.2.1904இல் பாலஸ்தாபனம் செய்து கருவறை உள்மதில் சுவர்களின் திருப்பணி முடித்து, 26.6.1910 இல் கும்பாபிஷேகம் செய்துள்ளார்கள். அதன் பின்னர் அவரது வாரிசுகள் வெளி ராஜகோபுரம், பெரிய வெளிமதில் சுவர்கள், திருக்குளம், நூற்றுக்கால் மண்டபம் இவற்றைப் புதுப்பித்து 26.05.1940இல் கும்பாபிஷேகம் நடத்தி உள்ளார்கள். 9.02.1998இல் ஆலய நிர்வாகத்தினரும், கிராமப்பொதுமக்களும் கானாடு காத்தான் செட்டியார் மரபினரும், இராமகிருஷ்ண

தபோவனத்தினரும் சேர்ந்து குடமுழுக்குத் திருவிழா நிகழ்த்தி இறை அருளுக்குப் பாத்திரமாகியுள்ளனர்.

இந்தக் திருக்கோயிலில் தினமும் காவிரி நீர் கொண்டுவந்து காலை திருமஞ்சன பூஜை தொடங்கி நாள் தோறும் நான்கு கால பூஜைகள் நடைபெறுகின்றன. திருச்சிராப்பள்ளி மாவட்டச் சிறப்பு நிகழ்ச்சிகளில் ஒன்றாக ஆண்டு தோறும் ஐப்பசி முதல் நாளில் 'துலாஸ்நானம்' என்னும் திருவிழா நடைபெறுகிறது. இங்கு முதல் முழுக்கு எனவும், ஐப்பசி கடைசி நாளன்று மயிலாடுதுறையில் கடைமுழுக்கு எனவும் நடைபெறும் விழாக்கள் குறிப்பிடத்தக்கன.

# திருப்பாடல்கள்

திருப்பராய்த்துறையில் எழுந்தருளியுள்ள தாருகேசர் மீது திருஞானசம்பந்தர் 'பராய்த்துறைஆறுசேர் சடை அண்ணலே ' என்றும் 'பராய்த்துறைஆலநீழல் அடிகளே' 'பராய்த்துறை அரவமார்த்த அடிகளே' அடையநின்ற அடிகளே, செல்வம்மல்கிய செல்வர் பராய்த்துறைச் செல்வர் என்று பலவாறாய்ப் பதினோரு பாடல்களில் பாடிப் பரவியுள்ளார்.

திருநாவுக்கரசர் பெருமான் இத்திருத்தல இறைவன் மீது காவிரித் தென்கரைத் திருப்பராய்த்துறை மேவிய செல்வரே , தென்திருப்பராய்த்துறை மேவிய செல்வனார், பராய்த்துறைச் சோதியானைத் தொழுது எழுந்துய்ம்மினே, என்றெல்லாம் பதினோரு பாடல்களில் உருகிப்பாடியுள்ளார்.

மாணிக்கவாசகர் தம் பாடலில் 'பராய்த்துறைமேவிய பரனேபோற்றி' எனவும், 'தென்பராய்த்துறையாய் சிவலோகா' எனவும் அருளியுள்ளார்.

அருணகிரியார் தம் திருப்புகழில், 'அற்புத மூவரிலங்கு பராய்த்துறைப் பதிப்பெருமாளே' எனவும், பட்டினத்தார், 'எண்ணறகரிய பராய்த்துறை ஏர்கொள்' எனவும் பாடியருளியிருக்கும் பெருமை கருதற்பாலது.

தாருகேசரந்தாதி என்னும் இந்தப் படைப்பும் தாருகாவனேசுவரரின் அருளுக்கு உரியதேயாம்.

# தாருகேசரந்தாதி

## காப்பு

*வெண்மலரில் அமர்ந்தாளை வேழத்தின் முகத்தானைத்*
*தண்ணளியைத் தாங்கியநல் தனிச்சுடர்வேல்*
*கொண்டானை*
*எண்ணரிய கோடிமுறை ஏத்திடுவேன் தாருகேசன்*
*பண்ணமைத்துக் கண்ணுதற்கண் பரமனைப் பாடுதற்கே!*

பொருள் :-

வெள்ளைத்தாமரை மலரில் வீற்றிருக்கும் கலைமகளை, யானை முகத்தானாகிய கணபதியைக் கருணையைத் தன் சுடர்மிகுந்த வேலில் கொண்டுள்ள முருகனை, எண்ணற்ற கோடி முறை வணங்குவேன், தாருகாவனத்தில் எழுந்த ருளியிருக்கும் இறைவனை, நெற்றியில் கண்பெற்றிருக்கும் பரம்பொருளைப் பாடல்கள் இயற்றிப் போற்றுதற்பொருட்டு வணங்குவேன்.

தெளிவு:-

கல்விக் கடவுள் கலைமகளும் காப்புக் கடவுள் கணபதியும் மொழிக்கடவுள் முருகனும் நூல் கடவுள் பரமனும் இந்த அந்தாதி நூல் அமைவுற அருள் வழங்க வேண்டுதல் புலனாம்.

# நூல்

1. *திருக்கயிலை தனிலிருந்து தெவிட்டாத*
*அருள்சுரக்கும்*
*பரமன்தன் திருநாமம் பன்முறைநாம் ஓதுதலும்*
*பராய்த்துறையான் பாதத்தில் பன்மலர்கள் தூவுதலும்*
*கருமவினை தீருதற்குக் கண்டவழி வேண்டுகவே!*

*பொருள் :-*

கைலாய மலையமர்ந்து உலகத்தவர்க்கு அருள் வழங்கும் பரம்பொருளின் திருவடிகளைப் போற்றிப் பலமுறை அவர் நாமம் சொல்லிப் போற்றுதலும், திருப்பராய்த் துறையமர்ந்து உலகத்தவரைக் காத்தருளும் தாருகாவனேசுவரர் திருவடியில் பலமணமிக்க மலர்களைத் தூவுதலும் அவரவர் செய்த தீவினைப் பலன்கள் அகலுதற் குரிய வழிகளாகும்; யாவரும் வேண்டுக.

*தெளிவு :-*

கயிலை யாத்திரைப் பலனும் திருப்பராய்த்துறை வழிபாட்டுப் பலனும் இணையெனக் கருதப்படுகிறது.

2. *வேண்டுதல் வேண்டாமை இன்றித்தன் அடியவரை*
*யாண்டும் புரந்தருளும் எம்கோமான் தன்னரையில்*
*பூண்டுள்ள புலித்தோலாய்ப் பாவியேன் யானிருக்க*
*வேண்டுவனே அம்மானே! வினைதீர்த் தருள்வாயே!*

*பொருள் :-*

தன் அடியவர்களை வேண்டியவர், வேண்டாதவர் என்ற வேறுபாடின்றி எப்போதும் எங்கும் காத்துவருகின்றான் எம் இறைவன். அவன் தன்னுடைய இடையில் அணிந்துள்ள புலித்தோலாகவேனும் இருப்பதற்குப் பாவமே வடிவெடுத்த யான் வேண்டுகிறேன். பெருமானே ! எம் தீவினைகளை நீக்கி அருள்புரிவாயாக !

*தெளிவு:-*

இறைவன் விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற் பட்டவன். அத்தகையவனின் புலித்தோலும் தீவினைகளைப் போக்கும்.

3. *வாயேதும் சொலத்தொடங்கின் வண்டமிழின்*
*திறத்தாலே*
*தாயாயும் தந்தையுமாய் நின்றென்னைத் தாங்குகின்ற*
*தூயசெஞ் சடையானைத் தொழுதேத்தும் கீழான*
*நாயேனைக் கடைத்தேற்றி நற்கதிசேர் எம்மானே !*

*பொருள் :-*

வண்டமிழின் வாயிலாக யான் எது பேசத் தொடங்கினாலும் தாயாகவும் தந்தையாகவும் இருந்து எம்மைத் தாங்குகின்ற தூய செஞ்சடையானாகிய சிவபெருமானைத் தொழுது போற்றுதலை மட்டும் செய்யும். கீழான இயல்புபடைத்த நாய்போன்ற என்னைக் காப்பாற்றிக் கடைத்தேற்றுவாயாக இறைவா !

*தெளிவு :-*

பரம்பொருளின் பெரும்புகழைப் பாடிப்பரவுதல் மட்டுமே வாயின் செயலாயிருத்தல் வேண்டும்.

4. *மானேந்தித் தன்னுடலில் மங்கையுமை தனையேந்தி*
*வானமதிச் செஞ்சடையில் கங்கையெனும்*
*நங்கையேந்தி*
*ஈனஉடல் ஏந்தியஎன் இன்னலெலாம் ஏந்திநிற்கும்*
*ஆனபொருள் அறுபத்து நான்குடையான்*
*அவனன்றோ!*

*பொருள் :-*

சிவபெருமான் ஒருகையில் மானைத் தாங்கி, உடலில் உமையம்மையைத் தாங்கிச் சிவந்தசடையில் நிலவையும், கங்கையெனும் மங்கையையும் தாங்கி நிற்பவன், ஆயகலைகள் அறுபத்து நான்கிற்கும் உரியவனான எம்பெருமான் ஈனப்பிறப்பெடுத்த அடியேனின் துன்பங்களெல்லாம் தாங்கிக் கொள்வான்.

*தெளிவு:-*

அறுபத்து நான்கு கலைகளையும், உமாதேவி கங்காதேவியரையும், பிறைநிலா,மான் ஆகியவற்றையும் தாங்கவல்லான், தூய அடியவரின் துயரங்களையும் தாங்குவான்.

*5. ஓமென்னும் மந்திரத்தின் உட்பொருளை*
*உணர்த்தற்குத்*
*தாமன்றே ஏரகத்தில் தமிழ்க்குமரன் தன்னிடத்தில்*
*கீழமர்ந்து கேட்டிட்டாய் பராய்த்துறைப் பாங்கனே*
*யாமுன்னைக் கேட்பதெலாம் யாவினையும்*
*நீங்குதற்கே.*

*பொருள் :-*

ஓமென்னும் பிரணவத்தின் உட்பொருளை உலகவர் அறிவதற்காகத் திருவேரகம் என்ற சாமிமலையில் முருகன் மேலமரப் பரமன் கீழமர்ந்து கேட்டார். பராய்த்துறைப் பெருமானே! யாங்கள் உன்னிடம் வேண்டுவது யாதெனின் எல்லா வினைகளையும் நீக்கி நலன் தருவதேயாம்.

*தெளிவு :-*

உடையார் முன் இல்லார் போல் பணிந்து கற்றலையும், தம்மின் தம்மக்கள் அறிவுடையவராய்த் திகழப் பெற்றவர் விழைதலையும் உலகவர் உணரப் பரம்பொருள் முருகனிடம் பாடம் கேட்டார்.

*6. கேசவனும் நான்முகனும் கீழொருவன் மேலொருவன்*
*நேசமுறத் தேடிடவைத்து ஆணவத்தை அடக்கியஎம்*
*ஈசா!நும் எழில்கோலம் காண்பதற்கே ஏழையேன்யான்*
*பாசமுடன் நிற்கின்றேன் பராய்த்துறைதான் வாரீரோ ?*

*பொருள் :-*

கேசவனைக் கீழாயும் நான்முகனை மேலாயும் முறையே அடியை ும் முடியையும் தேடவைத்து அன்புடனே ஆணவத்தை அடக்கிய இறைவனே! நின்னுடைய அழகான வடிவத்தையான் கண்டுமகிழத் திருப்பராய்த் துறையம் பதிக்கு எழுந்தருளுவீராக.

*தெளிவு :-*

உயர்வு தாழ்வு கருதி ஆணவம் கொள்ளலாகாது. எளியவர்க்கு இரங்கும் இயல்பு இறைத் தன்மையாம்.

7. *வாரிவளம் இருமருங்கும் வழங்கிவரு பொன்னியதன்*
*நீரில்நீர் இறங்கிவிட்டால் நீள்சடையில் வீற்றிருக்கும்*
*சீரியவெண் பிறைமதியும் செஞ்சடையின்*
*நீங்கிடுமென்று*
*ஓரினிய பயத்தாலோ தென்கரையில் நிற்கின்றீர் ?*

பொருள் :-

எம்பெருமானே! இரண்டு கரைகளிலும் வளங்களை வாரி வழங்கி வருகின்ற காவிரியில் இறங்கினால் சடைமுடியில் உள்ள பிறையானது நீரில் மிதந்து சென்றுவிடும் என்ற அச்சத்தால் தான் தெற்குக்கரையில் திருப்பராய்த்துறையில் நிற்கின்றீரா?

தெளிவு :-

வளம் கொழிக்கும் அகண்ட காவிரியின் தென்கரையில் பராய்த்துறை உள்ளது. அச்சம் உள்ளடங்கிய எண்வகை மெய்ப்பாடுகட்கு அப்பாற்பட்டவன் இறைவன்; ஆயினும், அடியவர் பொருட்டு ஆட்படுபவன்.

8. *நின்றாடும் நின்வண்ணம் நித்திலப்பொன்*
*னம்பலத்தில்*
*அன்றோடிக் கண்டிடவே வந்தேன்யான் காணாதே*
*மன்றாடிக் கால்சலித்தாய் மன்னுபுகழ்ப்பராய்த்துறையில்*
*மன்றாடிக் கிடக்கின்றேன் மனமுவந்தீங் கெழுகதிரே!*

பொருள் :-

தில்லைச் சிற்றம்பலத்தில் நீ நடனமிடுகின்ற காட்சியைக்காண அன்று ஓடிவந்தேன்; காணாமால் திரும்பினேன். மன்றத்தில் ஆடிய களைப்பில் ஓய்வெடுப்பாய் போலும். யான் திருப்பராய்த்துறையில் நின்னைக் காணக் காத்திருக்கிறேன். ஒளியே ! அங்குத் தோன்றிடு.

தெளிவு :-

உலக உயிர்களை ஆட்டுவிக்க முதலில் தாம் ஆடுகின்ற முதல்வனும் அன்பரின் ஆணையை அன்புடன் ஏற்பவனும் இறைவனே!

9. *எழுகதிரும் விழுபனியும் இணைகின்ற தோற்றம்போல்*
*அழகுமுகம் திருநீற்றோடு அணிசேர்க்கும் பெருமானை*
*விழிப்புறச் செய்தென்றன் வினைதீர்க்க,அம்பிகையே !*
*பழமரக் காநிறைந்த பராய்த்துறைநீ பாரம்மா !*

*பொருள் :-*

அம்பிகையே! எம் தீவினை நீங்க, நெற்றிநிறை நீற்றோடு அழகு கொஞ்சும்திருமுகம் கொண்ட சிவபெருமானின் மார்பில் வெயிலும் பனியும் இணைந்து ஒன்றாதல் போல் சாய்ந்து பழங்கள் நிறைந்த சோலை மிகுந்த பராய்த்துறையாகிய திருத்தலத்தில் கருணையுடன் எம்மைப் பார்ப்பாயாக!

*தெளிவு :-*

மகன் தன் வேண்டுகோளைத் தாய்வழியாகத் தந்தையிடம் அனுப்புதல் மரபு. திருப்பராய்த்துறை கனிநிறை சோலைகள் சூழ்ந்தது.

10. *மாலவன் பரந்தாமன் மண்ணொடும்*
*வெண்ணெயுண்ட*
*நீலமேனி யான்துயிலும் பாற்கடலைக் கடைந்தெழுந்த*
*ஆலகால விடமுண்டாய் கறைக்கண்ட னானாய் நீ*
*வாழ்வளிக்க அன்றேல்அவ் விடமளிக்க வாஇறைவா !*

*பொருள் :-*

இறைவா! திருமாலாகிய பரந்தாமன் வெண்ணெய்யும் மண்ணையும் உண்டவன். அவன் துயிலும் பாற்கடலைச் கடைய வெளிவந்த விடமேற்றுக் கறைக்கண்டன் ஆனாய் எனக்கு நல்வாழ்வு அளிக்காவிட்டால் அந்த விடத்தையேனும் கொடுக்க வருக !

*தெளிவு :-*

உலக நலன் கொண்டோர்க்கு உணவு நஞ்சாகாது எந்த உணவையும் வெறுக்கார். அன்புடையார் கையால் தரின் நஞ்சும் அமுதமாம்.

*11. வாக்கீசர் தம்பொருட்டு வந்தனைஐ யாற்றுக்குத்*
*தூக்கினைமண் பிட்டுக்குத் துணையற்ற கிழவிக்காய்த்*
*தாக்குண்டாய் பிரம்பாலே தமிழ்க்கூடல் மாநகரில்*
*போக்கற்றுக் கிடக்குமென் குறைமட்டும்*
*காண்கிலையே !*

பொருள்:-

கடவுளே ! திருநாவுக்கரசர்க்குத் திருவையாற்றில் காட்சி தந்தாய்; மதுரை மாநகரில் ஆதரவற்ற கிழவிக்காகப் பிட்டுவாங்கிஉண்டு மண்சுமந்தாய்; பிரம்படியும் பெற்றாய்; ஆற்றுவார்அற்று வாழும் என் குறைகளை மட்டும் காணாதிருக்கிறாய்.

தெளிவு :-

அன்பருக்கு அன்பராய் அடியவர்க்கு அடியவராய்ப் பலபடியிறங்கி வரும் பரம்பொருள் எவ்வுயிரும் தாமாய் இருப்பதை எல்லாரும் பிரம்படி பெறச்செய்து விளக்கினார். நாளும் அவரை நாம் அன்புடன் தொழ வேண்டும்.

*12. காண்கின்ற தோற்றமெலாம் கந்தனெழில்*
*தோன்றிடுதே*
*ஏனென்று கேட்டாலோ எடுத்தியம்ப இயலவில்லை*
*ஊணின்றி நாடோறும் உடல்வாட நேரிடினும்*
*நீயீன்ற குமரனவன் நினைவென்றும் நீங்காதே !*

பொருள் :-

எங்கும் முருகனின் அழகு தோன்றுகிறது. ஏனென்று கேட்டால் விடைதெரியவில்லை. நாளும் உணவு இல்லாமல் உடல் வருந்த நேர்ந்திடினும் பெருமானே நீஈன்ற குமரனின் நினைவு உள்ளத்தில் நீங்காது; என்றும் நிலைத்திருக்கும்.

தெளிவு :-

ஆறெழுத்து மந்திரத்திற்குரிய ஆறுமுகனைத்தந்தவன் சிவன். சிவனில் அவனும் அவனில் சிவனும் கலந்து அன்பரின் நினைவில் உறைவர்.

13. *நீர்வார்செஞ் சடைமீதில் நின்றாடும் நாகமெனப்*
*பார்மீதில் வடிவெடுக்கப் பாவியேன் இரக்கின்றேன்*
*நீர்எம்மை ஆட்கொள்ள விழிதிறந்து வழிசெய்தால்*
*சேர்வேன்நின் மலர்ப்பாதம் செங்கரங்கொள்*
*சங்கரனே !*

பொருள் :-

நீர் வழியும் சிவந்த சடைமுடியில் ஆடும்பாம்பாகவேனும் இப்புவியில் பிறப்பெடுக்க வேண்டுகிறேன். செங்கைகளையுடைய சிவனே! தாம் என்னை ஆட்கொள்ள அருள் கண்களைத்திறந்து நல்வழி காட்டினால் தங்கள் மலர்போன்ற பாதங்களை அடைவேன்.

தெளிவு :-

சிவனடிசேர்வார் ஆட்கொள்ளப்படுவர். ஆட்கொள்ளப் படுபவர் அவனடிசேர்வார். தூய அன்பரைத் தலையாலும் இறைவன் தாங்குவான்.

14. *கறைக்கண்டன் பொன்னடிகள் கழுவிவரும்*
*நீரருந்தி*
*மறக்கின்றேன் புறவுலக இன்பமெலாம் உள்ளத்தே*
*பிறக்கின்ற ஆசையெனும் பேய்க்கணங்கள்*
*எரித்தற்கே*
*திறந்திடுவாய் நுதற்கண்ணைத் திரிசூல நாயகனே!*

பொருள் :-

திரிசூலத்தைக் கொண்ட நாயகனே! நின்பொன்னடிகளைக் கழுவி வருகின்ற புனித நீரைப்பருகி இப்புறவுலக இன்பங்களை மறக்கின்றேன்.ஒவ்வொரு நொடியும் உள்ளத்தில் தோன்றுகின்ற ஆசைகளை நெற்றிக்கண்ணால் நீ எரித்திடுவாயாக !

தெளிவு:-

பரம்பொருளை நினைக்கப் பிரபஞ்சம் மறையும். பிரபஞ்சத்தை நினைக்கப் பரம்பொருளே மறையும் ஆதலின் ஆசைஅறுமின்.

15. *நாயகனே ! ஆதிமுதல் வேதமுனி வித்தகனே !*
*தூயநிற வெண்ணீற்று மேனியனே! மீனாளை*
*நேயமுறத் தன்னுடலில் தாங்கியநல் தாருகேசா !*
*காயமிது வீடடைய நீயருள வேண்டுவனே !*

*பொருள் :-*

தலைமையானவனே! பண்டுதொட்டு வேத முனிவர்க்கும் முதல்வனே! தூய வெண்ணீற்று உடலைப் பெற்றவனே! பார்வதியைப் பாசமுடன் பாகம் தந்து தாங்குபவனே! தாருகேசா! இந்த ஆன்மா வீடுபேறு அடைய அருள்வாயாக!

*தெளிவு :-*

திருநீற்றோடு குங்குமமும் ஒரு நெற்றியிலே காணப்பெறுபவர் வீடுபேறடைவர். வேதம் கற்றலால் ஆகும் பலன் நாதன் நாமம் ஓதுதலால் கிட்டும்.

16. *ஏழையர்பல் லாயிரம் பேர் ஏங்கியவாறு உணவின்றிக்*
*கூழைமட்டும் குடித்துயிரைக் காப்பவர்தம்*
*குடியழித்துப்*
*பாழடையப் பணமூட்டை பதுக்கிவரும் பாவியரை*
*வாழவிட்டு வேடிக்கை பார்ப்பதேஉன்*
*வாடிக்கையோ ?*

*பொருள் :-*

பசித்த போது கூழை மட்டும் குடித்து உயிர்வாழும் ஏழையர் பலர். அவரைத் துன்புறுத்திப் பொருள்சேர்த்துப் பதுக்கி வாழ்வோரை வாழவிட்டு வேடிக்கை பார்ப்பது தான் இறைவா நின் வழக்கமா ?

*தெளிவு :-*

பணத்தைப் புதைத்து வைப்பவர் கேடுகெட்ட மானிடர். அப்பாவி மக்களைத் துன்புறுத்துவோர் தண்டிக்கப்பட வேண்டியவர்.

17. *வானகமும் வையகமும் வசைவாரிக் கொட்டிடினும்*
*ஊனுயிரை மகிழ்வுடனே உனக்களிக்கக் காத்திருக்கும்*
*ஈனகுணத் தோடு நட மாடுமென்னைச் சீர்படுத்தி*
*ஊனப் பிறப்பறுத்தே உன்றனடி சேர்த்திடய்யா !*

பொருள் :-

ஆண்டவனே! விண்ணவரும் மண்ணவருப் வசைமொழிகளால் இகழ்ந்தாலும் இவ்வுடலை உயிை உனக்கே ஒப்படைக்கக் காத்திருக்கும் இழிந்த குணத்தானாகிய என்னை நன்னெறிப்படுத்திப் பிறப்பறுத்து நின் திருவடிக்கே அழைத்திடுவாயாக.

தெளிவு :-

பக்தியைப் பலர் பரிகசித்த போதும் சக்தியை இழத்தலாகாது. பிறப்பறுக்கும் பேராளன் அவன் ஒருவனே.

18. *யாவர்க்கும் யாதொன்றும் யாத்திரையால் ஆகாதே*
*மூவர்க்கும் மடியீந்த முத்தமிழின் வாழ்த்தலின்றித்*
*தேவர்க்குள் ஆகுதற்கும் நரகிற்குள் ஏகுதற்கும்*
*யாவர்க்கும் அன்பீகை அடக்கமிவை வேண்டுமன்றே!*

பொருள் :-

மூவேந்தரையும் மடியிலேந்திய முத்தமிழால் இறைவனை வாழ்த்தி வணங்குதலைத் தவிர வேறுஎந்த யாத்திரையாலும் பலன் கிட்டாது. துறக்கம் புகுவதும் நரகம் புகுவதும் அவரவர் கொண்டுள்ள அன்பு ஈகை அடக்கம் போன்ற குணங்களைப் பொருத்தே அமையும்.

தெளிவு :-

தமிழர் தமிழால் உணர்ந்து வழிபடுவது உயர்வு நல்கும்; அன்பு, ஈகை, அடக்கமற்ற யாத்திரைச் செயல்பாடுகள் பலன்தாரா.

*19. ஏகமாயிப் புவிமீதில் இருக்கின்ற பல்பொருளும்*
*ஏகமேயென் றெடுத்துணர்த்தும் பொருட்டே நீ மீனாட்குப்*
*பாகமெனத் தன்னுடலில் பகுதியையும் தந்தனையோ ?*
*ஏகம்பன் எனும்பெயரை ஏற்றனையோ ? தாருகேசா?*

பொருள் :-

இவ்வுலகில் பலவாய்த்தோன்றும் பொருள் யாவும் ஒன்றினுள் அடக்கமே என்பதை விளக்க மீனாட்சிக்குத் தன்னுடலில் பகுதியைத் தந்து ஆண்பெண் அடக்கமே ஒன்றான உயர்பொருள் என்ற தோற்றமும் ஏற்றாயோ? தாருகாவனக் கடவுளே ?

தெளிவு :-

கண்களுக்குத் தெரிவன, தெரியாதன, புலன்களுக்கு அறிந்தன. அறியாதன யாவும் அவனுள் அடக்கம்.

*20. தாருகேசா! தாரணியைப் புரக்கின்ற பொறுப்பேற்றாய்*
*ஊரகத்தார் கொண்டாடும் துலாமுழுக்கு நாளன்று*
*பாரகத்தே வாழ்மாந்தர் பராய்த்துறை பணிகின்றார்*
*சீரகத்தே தாராமல் செல்கின்றாய் பிறையுடனே!*

பொருள் :-

துலாமுழுக்கு நன்னாளன்று தேசத்தின் பல திசையினின்றும் மக்கள் வந்து வழிபட்டுப் பயன் பெறுகின்றனர். இப்படி உலகைக் காக்கும் பொறுப்புள்ள பெருமானே! என்னுள்ளத்திற்குச் சிறப்பைத் தாராமல் பிறைமதியுடன் செல்கின்றாயே !

தெளிவு :-

திருப்பராய்த்துறையில் இறைவன் காவிரியில் நீராடும் அதே வேளையில் மக்கள் தாமும் மூழ்கிப் பயன்பெறுதல் துலாமுழுக்குத் திருவிழா. மக்கள் ஈரஆடையுடன் ஆலயம் சென்று வழிபடுதல் மரபு.

21. *பிறைநுதலாள் வரைராசன் பெற்றெடுத்த பார்வதியாள்*
*பிறைமுடியான் தன்னுடலில் பெற்றிருக்கும் பாகமதில்*
*குறைவடிவாய் எள்ளளவும் இடமளித்தால் நாயேனும்*
*அறையதுவாம் அவனுளத்தில் புகுந்திடவும்*
*முயல்வேனே !*

பொருள் :-

பிறைநிலா போன்ற நெற்றி கொண்ட மலையரசனின் மகள் பார்வதி பிறைநிலவைச் சடையில் கொண்ட சிவனின் உடலில் பெற்ற பாகத்தில் எள்ளளவு சிறிய இடம் தந்தால் நாய் போன்ற யான் அவனுள்ளத்தில் இடம் பிடித்திட முயற்சி செய்வேன்.

தெளிவு :-

மலையரசனின் மகள் பார்வதியாதலின் மலைமகள். இறைவன் தன்கருணையை எள்ளளவு காட்டினாலே மலையளவு பலன் கிட்டும். அவனருளைப் பெற அந்த அளவே போதும்.

22. *முயலாவேன் நின்பாத மலர்காண விரைவாலே*
*அயலாக்கிச் செல்கின்றாய் அறிவழியச் செய்கின்றாய்*
*மயல்கொண்டே தளர்ந்தீங்கு மனம்வாடி நிற்கின்றேன்*
*வெயில்மழை பாராமல் பாராய்த்துறையில் பலபகலே !*

பொருள் :-

இறைவா! நின்திருவடிகளைத் தொழ முயல்போல விரைந்து வருகின்றேன். ஆனால் நீ என்னை அயலவன் போல் எண்ணிச் செல்கிறாய். அறிவு கலங்கி , மயங்கி , மனம்நொந்து திருப்பராய்த்துறையில் வெயில்மழை பார்க்காமல் பலநாளாய் நிற்கின்றேன்.

தெளிவு:-

பக்தி செலுத்தப் பகலிரவு ஏது ? பக்தர்க்கு
வெய்யில் மழை தரும் துயர் யாது ?

*23. பகலென்றும் இரவென்றும் பாராமல் ஆலயத்தில்*
*அகன்றவாய் சிறுநாக்கொள் மணியழகாய்*
*ஒலியெழுப்ப*
*மிகத் தொலைவு வினைசெய்யும் மானிடரும்*
*செவியுற்றே*
*அகமாரப் புகழ்ந்திசைப்பர் பராய்த்துறையான்*
*பாதத்தே.*

*பொருள் :-*

ஆலய மணியின் சிறிய நாக்கு எழுப்பும் ஓசையை நெடுந் தொலைவில் பணிபுரியும் மக்கள் செவியுற்றுப் பகலென்றும் இரவென்றும் கருதாமல் திருப்பராய்த்துறை நாதனின் திருவடியில் உளமாரப் புகழ்ந்து பாடுவர்.

*தெளிவு :-*

பலபணியில் ஈடுபட்டிருப்போரும் ஒரு மணியில் ஒருங்கிணைவதே ஆலயமணியின் வழியாக மனித இனம் அறிந்த மாண்பு.

*24. பாதமலர்ப் பூசைதனில் பாசமலர் நான் தூவி*
*நாதமுடன் கீதமொன்று நல்லதமிழ்ப் பாட்டாலே*
*சூதகற்றும் பராய்த்துறை வாழ் சொக்கனடி*
*சூழ்கின்றேன்*
*வேதநெறி மாறாமல் வேண்டுமருள் தந்திடவே!*

*பொருள் :-*

இனிமையும் இசையும் பெற்ற தமிழ்ப்பாடல்களால் அன்பு மலர்களை அவன் திருவடியில் தூவி, வேதநெறிமாறா வாழ்விற்கு அருள் வேண்டித் திருப்பராய்த்துறைச் சிவனைத் தொழுகின்றேன். வஞ்சக மனப் போக்கை மாற்றவல்லவன் சொக்கனாகிய சிவன் ஒருவனே.

*தெளிவு:-*

வஞ்சக நெஞ்சம் வாழ்வில் வளம் தராது. நம்மையும் வாழ விடாது; பிறரையும் வாழ ஒட்டாது. நாம் நெஞ்சில் கடவுளை அமர்த்துவோம்.

25. *வேலிருக்கும் பாலகன்கை வினைபெருக்கும்*
*கையறுக்கும்*
*சூலிருக்கும் சாரணன்மேல் சுடர்பெருக்கும்*
*பிறையிருக்கும்*
*நூலிருக்கும் அவன் மார்பில் நானிருக்கப்*
*பொன்னிகரை*
*மேலிருக்கும் பராய்த்துறைவாழ் மேலவனை*
*ஏத்திடுவேன்*

*பொருள் :-*

வேலவனின் கை பல நன்மைகளைத் தரும். திரிசூலமேந்திய சிவன் தலையில் உள்ள பிறை நிலவு ஒளி தரும். நூல்கொண்ட சிவ பெருமான் மார்பில் யானும் தங்குவதற்குக் காவிரிக் கரையில் திகழும் திருப்பராய்த்துறைத் தலைவனை வணங்குவேன்.

*தெளிவு :-*

வேலவனின் கை நலம் அளிக்கும். சிவனின்
சூலமேந்திய கை பகையழிக்கும். உலகில்
நன்மை விளையப் பகை ஒழிய வேண்டும்.

26. *மேலவனை வேலவனை ஈன்றெடுத்த நாயகனைக்*
*காலமெலாம் சிந்தையுளே காணுதற்குக் கவிபாடிக்*
*கோலஎழில் கொண்டிருக்கும் கோவில்கள் பலசென்று*
*சீலமுறப் பெறுவேனோ சிவனடியார் பெற்றஅருள்.*

*பொருள்:-*

யாவற்றுக்கும் மேலானவனை, முருகனை ஈன்ற முதல்வனைக் கால முழுவதும் உள்ளத்தில் வைத்துப் போற்றி மகிழ அழகான பல சிவன் கோவில்களுக்குச் சென்று நாயன்மார்கள் பாடல்களைப் பாடிப் பெற்ற அருளை யானும் பெற்றுச் சிறப்படைவேனோ?

*தெளிவு :-*

முயற்சி பல முன்னேற்றங்களைத் தரும். சான்றோர் வழியில் நம்போன்றோர் செல்வது நாம் ஈன்றோர், நம்மை ஈன்றோர் எனப் பலர்க்கும் நலமே தரும்.

*27. பெற்றவருள் பெரும்பேறு பெற்றவரும் இவரென்றே*
*கற்றவரும் மற்றவரும் கனிவோடு செப்பிடவே*
*பற்றவரும் தீவினைகள் அகற்றிப்பல் சுகம்பெருக்கும்*
*சுற்றமென வருவீரோ பெற்றவர்க்கே போய்ச்சேர !*

*பொருள் :-*

அருள்பெற்ற நல்லாருள் பெரும் பேறு பெற்றவர் இவரே என்று என்னைக் கற்றவர்களும் மற்றவர்களும் கனிவுடன் புகழும் பெருமை எம்மைப் பெற்றவர்க்கே போய்ச்சேருமாறு "இறைவா! எம்மைப் பற்றிக் கொள்ள வருகின்ற தீவினைகளை நீக்கி இன்பம் தரும் உறவினரைப் போல் உடன் வருவீராக !".

*தெளிவு :-*

சான்றோர் எனப்பிறர் புகழக்கேட்டுப் பெற்றோர் பெருமகிழ்வடைவர் தூய அன்புடைார்க்குத் துணை இறைவன் ஒருவனே . அன்னை, தந்தை , ஆசான் யாவரும் பிரியநேரும். கடவுள் ஒருவனே கடைசி வரை உறவு.

*28. போய்ச்சேரப் பெருந்துணையாய் வருவீரோ புவிமீதில்*
*வாய்ச்சாரல் மிக்கவரே வாழும்வகை கற்றவராம்*
*வாய்க்காலை வகுத்துவாழ்வை வளமாக்கு வீரன்றேல்*
*நாய்க்கோலம் கொண்டேற்கு நற்கதிதான் யாதய்யா ?*

*பொருள் :-*

உலகில் பேசத் தெரிந்தவரே பிழைக்கத் தெரிந்தவராம். இறைவா! நாய் போன்ற வாழ்வு வாழும் எனக்கு நல்ல வழியைக் காட்டி வாழ்வை வளமாக்குவீர். அல்லாவிடில் வேறு கதியற்ற அடியேனுக்கு இறுதிக்காலம் வரை உற்ற துணையாயிருந்து எம்மை வழி நடத்துவீராக!

*தெளிவு :-*

பிறரைத் துன்புறுத்தாத பேச்சு நலம் பயக்கும். நாம் இன்சொல் பேசி வன்முறை ஒழிப்போம்.

*29. யாங்காகி யர்என்றேங்கி யாவரும்உன் திருநோக்கும்*
*பாங்கினையும் பார்த்துத்திருப் பராய்த்துறையுள்*
*இருக்கின்றாய்*
*ஓங்கார மாயருளாய் ஓடிவரும் தாயருளாய்*
*தீங்கேதும் அணுகாது தெளிவு செய் எம்பெருமானே !*

பொருள் :-

இறைவனின் அழகைக் காணக்காத்திருக்கும் அடியவரின் நிலையைப் பார்த்தவாறு திருப்பராய்த்துறையில் எழுந்தருளி யிருக்கும் பெருமானே ! அன்புகாட்டும் தாயின் அருளுடன் பெருவளியாய் உள்ளவனே! எம்மைத்தீமைகள் அணுகா வண்ணம் அறிவுத்தெளிவு கூட்டிக்காப்பீராக !

தெளிவு :-

தாயன்புடன் அருள்புரியும் ஆண்டவன் இருக்கின்ற இடத்தை விட்டு எங்கெங்கோ அலைதல் கூடாது. உள்ளொளியைப் பெருக்கும் பேரொளியை உணர்ந்திடுவோம்.

*30. பெருமான்நின் திருப்பார்வை பெற்றவர்கள்*
*பெற்றபதம்*
*ஒருநாளில் பெறுதற்கே உயிர்தாங்கி நிற்கின்றோம்*
*உருப்பெறவே மறுவழிகள் உரைப்பவனும்*
*சிவனென்று*
*திருப்பராய்த் துறையானைத் தெரிந்தேயாம்*
*பணிகுவமே !*

பொருள் :-

இறைவா! நின் அருட்பார்வையின் பலனைப் பெற்ற சான்றோர்கள் அடைந்த உயர்நிலையைப் பெறுவதற்காகவே உயிர் வாழ்கிறோம். உருப்பெறும் பல உயர்வழிகளை வகுப்பவன் திருப்பராய்த்துறைத் தாருகாவன ஈசுவரனே எனத் தெரிந்து . வணங்குவோம்.

தெளிவு :-

மனிதனின் ஆன்மா செம்மையுறும் மார்க்கத்தைக் காட்டுபவன் இறைவன். அவனை வழிபடுதல் ஆன்மபலத்திற்கு உதவும்.

31. *பணிவில்லா மானிடரும் படுகின்ற பாடறிந்து*
*துணிவெல்லாம் தந்துமனத் தூய்மையினைச்*
*சேர்த்தளிக்கும்*
*மணிமொழியாட் கிடமளித்த மன்னவ! நின் மணியார.*
*பணிவிடத்தின் பயனறிந்து பணிவினையாம்*
*பழகுவமே!*

*பொருள் :-*

மனத்தின்கண் தூய்மையும், துணிவும் தரவல்ல அழகிய மொழி பேசும் அன்னை சக்திக்கு இடம் தந் மன்னவனே! உலகில் பணிவில்லாத மக்கள் படு பலதுன்பங்களை உணர்ந்து,நின் கழுத்தில் திகழும் பாம்பின் விடமெண்ணிப் பயன் கருதியாம் பணிவுடன் வாழப்பழகுவோம்.

*தெளிவு:-*

பணிவில்லா வாழ்வு மானிடர்க்குப் பயன்தராது இறையச்சம் கொண்டு செயல்படுவார் உயர்வெய்துவர் அரவச்சம் உள்ளத்தில் உண்டாயின் அறவினையாற்றுவர்.

32. *பழம்பெறவே பார்வலமாய் வந்தசிறு பாலகனை*
*அழகினுக்கே ஆண்டவனை அகிலத்தை ஆளுதற்குப்*
*பழகிடச்செய் பரம்பொருளே! பராய்த்துறைப்*
*பெருமானே !*
*குழவியென்றன் குறைபோக்கிச் செய்தருள்க*
*நிறைவெல்லாம்.*

*பொருள்:-*

பழத்திற்காக உலகை வலமாக வந்த இளையமகனை, அழகுக்கடவுளாம் ஆறுமுகனை மலையில் அமர்ந்து மாநிலத்தை ஆளுதற்குப் பழக்கிய பரம்பொருளே! திருப்பராய்த்துறை தாருகாவனக் கடவுளே! சிறுவனாகிய என் குறைகளைப் போக்கி நிறைகளைத் தந்து அருள்புரிவீராக!

*தெளிவு :-*

மகனைச் சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடன்
சான்றோன் ஆதல் பிள்ளைக்குக் கடன்

33. *நிறைவென்றும் வையத்தில் நிலைக்கட்டும்*
*என்றெண்ணிக்*
*கறையாக்கிக் கொண்டாயே கண்டத்தை, ஒளிகூட்டப்*
*பிறைதாங்கி மகிழ்ந்திருக்கும் பேரழகே! நின்புகழைப்*
*பறைசாற்றப் பாப்புனையும் பாலகனைக் காப்பாயே!*

பொருள் :-

உலகிற்குப் பேரொளியை வழங்கப் பிறைநிலவைச் சடையில் தாங்கியுள்ள பேரழகனே! நீ உயிர்களின் குறைகளைப் போக்கி நிறைகளே நிலைத்திருக்க விரும்பி நஞ்சுண்டுக் கழுத்தைக் கறையாக்கிக் கெண்டாய். நின் புகழைப் பாடல்களால் பரப்பமுனைந்துள்ள சிறுவனாகிய என்னைக் காப்பாயாக !

தெளிவு:-

சிறியோர் குறைகளைத் தாங்குவோர் பெரியோர். பிறர் துன்பத்தைத் தம் துன்பமாகக் கொள்வோர் பெரியோர் சிறியோர் செய்த சிறுபிழையெல்லாம் பெரியோராயின் பொறுத்தல் கடனே.

34. *காவெல்லாம் நிறைந்துகவின் காட்டுகின்ற*
*பலநிறத்துப்*
*பூவெல்லாம் பொன்முகமே பொலிந்துளது பூவுலகில்*
*ஆவெல்லாம் சேர்ந்தளிக்கும் அருஞ்சுவைத்தீம்*
*பாணிறமும்*
*மேவுதிருப் பராய்த்துறையான் மேனியெழில்*
*தான்மனமே!*

பொருள்:-

மனமே! சோலைகளில் நிறைந்து அழகு கூட்டுகின்ற பலநிறத்தில் மலரும் பூக்கள் யாவற்றிலும் இறைவா! நின் திருமுகமே தெரிகின்றது. பூமியில் உள்ள பசுக்கள் தரும் சுவைமிக்க பாலின் வண்ணத்தில் திருப்பராய்த்துறையில் வீற்றிருக்கும் பெருமானின் மேனியழகே தோன்றுகிறது.

தெளிவு :-

பூமுகமும் பால்நிறமும் பரம்பொருளின் பொலிவைக் காட்டும். மலர்மணமும் பால்சுவையும் ஆண்டவனின் அருளைக் காட்டும்.

35. *மனத்தகத்துத் திளைத்திருக்கும் மாற்றவொணாத்*
*தீமையெனும்*
*சினத்தகத்துச் சிக்கியதிற் சீரழிந்து கொண்டிருக்கும்*
*இனத்துயரை எற்றைக்குநீ இல்லாமல் செய்குவையோ*
*அனைத்துயிரும் அற்றைக்கே அடிமலரில்*
*சேர்ந்திடுமே!*

பொருள் :-

மாற்றஇயலாத தீமையாகிய சினம் உள்ளத்தில் நிலைத்திருக்க, அதனால் வரும் பல துன்பங்களையும் என்றைக்கு உள்ளத்தை விட்டு முழுமையாக அகற்றுவீரோ?, அன்றைக்குத்தான் எல்லா உயிர்களும் நின் திருவடிமலர்களைச் சேர்ந்து பயன்பெறும்.

தெளிவு:-

சினத்தைப் போக்கி வாழக் கற்றவனே சிறந்த கல்வியாளன். சினம் கொண்டாரையும், சேர்ந்தாரையும் சேர்த்து அழிக்க வல்ல கொடிய தீ.

36. *சேர்ந்தபொருள் அனைத்திற்கும் சீரியதிரு*
*வருள்பொழியும்*
*தீர்ந்தவினை நாயகனே ! திருப்பராய்த் துறையமர்ந்து*
*சார்ந்தவர்க்கும் சாரார்க்கும் சமநோக்கு தனையீவாய்!*
*ஓர்ந்தெமக்குப் பல்லாற்றான் உய்யவழி தருவாயே!*

பொருள்:-

வினைகளைக் கடந்த இறைவா! தம்மை வந்து சார்ந்த அனைத்திற்கும் சிறப்பாக அருளைப் பொழிவாய். திருப்பராய்த்துறையில் எழுந்தருளிய நீ, உன்னிடம் சரணடைந்தார்க்கும் அடையாதார்க்கும் இணையான அருட் பார்வை வழங்குகிறாய். எம்மையும் சீர்தூக்கிப்பார்த்து நல்வாழ்வு வாழ வழி காட்டுவாயாக !

தெளிவு:-

இறைவன் நல்வினை தீவினைகளைக் கடந்தவன்; பிறப்பு இறப்பு அற்றவன்; விருப்பு வெறுப்பு இல்லாதவன்.

37. *வாயேதும் திறவாமல் வாழ்ந்தாலும் வாழ்வதற்கு*
*வாயேதும் அறியாதான் வளம்தெரியான்*
*என்றுரைப்பர்*
*வாயேதும் மொழிந்தாலே வாழ்வறுப்பர் இப்புவியில்*
*வாயேதும் காட்டிவரு வாய்வழங்க வருவாய் நீ!*

*பொருள் :-*

ஆண்டவா! வாய்திறந்து ஏதும் பேசாமல் அடக்கமாக இருந்தாலும் வாழ வழி அறியாதவன்; வளம் இல்லாதவன்; என்று உலகத்தவர் பழிப்பர். ஏதேனும் பேசினால் உடனிருப்போரே வாழ்க்கையை அழித்துவிடுவர். நல்ல வாழ்வு மேற்கொள்ள உலகில் வழிகாட்ட வருவாயாக!

*தெளிவு :-*

வையம் வாழ்ந்தாலும் தாழ்ந்தாலும் பழிக்கும். நல்லார் சொல்கேட்டு நல்லனபேசி, இறைவனைப் போற்றி உயர் வாழ்வு வாழ்வோம் நாம்.

38. *நீள்சடைமேல் நின்றொளிரும் நெடும்பிறைபோல்*
*தேய்ந்துகுறிக்*
*கோள் எதுவும் இல்லாத கொடுமனத்தர் தம்நாவின்*
*வாள்அரவு விடம் நீக்கி வஞ்சனைகொள்*
*மனம்போக்கி*
*நாளுதிக்கும் கதிர்மனத்தை நாட்டவர்க்கு நல்குகவே!*

*பொருள் :-*

பெருமானே! நின்சடைமீதில் இருக்கும் பிறையின் தேய்வினைப் போலத் தேய்ந்த மனம் படைத்த, குறிக்கோள் எதுவுமில்லாத மாந்தரின் உளத்திலும் நாவிலும் உள்ள வஞ்சத்தைப் போக்கி நாள்தோறும்தோன்றி ஒளிரும் கதிரவனைப் போன்ற மனத்தை எமக்கு வழங்குவீராக !

*தெளிவு :-*

நிலவு தண்ணொளி வீசினாலும் தேயும் இயல்புடையது. வெய்யவன் வெம்மையான கதிர்வீசினும் உயிர்களுக்கு உயிர்ச்சக்தி வழங்குபவன். அத்தகைய மானிடரே அகிலத்திற்குத் தேவை.

*39. நல்கிடவே நின்னையன்றி நல்லதுணை யாருளரே ?*
*நெல்வயல்சூழ் நெடும்புனல் சூழ் பராய்த்துறை*
*யான்நதியில்*
*மல்குதிரு மஞ்சனநீர் ஆடுதற்குக் கூடுவோர் தம்*
*கல்விநலம் செல்வவளம் கருணையுடன் கூட்டுவிரே!*

*பொருள் :-*

மிகுதியான நீர்வளம் மிக்க வயல்கள் நிறைந்த திருப்பராய்த்துறையில் எழுந்தருளியுள்ள இறைவன் காவிரியில் நீராடும்போது உடன் நீராடும் மக்களுக்குக் கல்வி வளமும் செல்வவளமும் வழங்கும் இறைவனை அல்லாமல் கருணையை வழங்கித் துணைபுரிவோர் வேறுஎவரும் இலர்.

*தெளிவு :-*

பொன்னி நன்னீராடல் உடலுக்கும் உள்ளத்துக்கும் நலம். திருப்பராய்த்துறையில் துலாமுழுக்கு நாளன்று சிவ பெருமான் நீராடும் வேளையில் நீராடுவோர்க்கு ஆன்மபலம் கூடும்.

*40. கூட்டுமொரு பாட்டரங்கின் குறைவிலாப்பல்*
*கவிதையெனத்*
*தீட்டுகிற யாவிலுமே தெளிவதனைத் தெரியவைத்து*
*நாட்டிலுள யாவருக்கும் நன்மைதரு பராய்த்துறைவாழ்*
*வேட்டுவனே வினைதீர்ப்பாய் நான்பொன்னி*
*நதிமீனே!*

*பொருள் :-*

பாட்டரங்கத்தில் ஏற்கப்பெறுகின்ற பாட்டினைப் போலச் செயல்படுகிற எல்லாவற்றிலும் தெளிவைக்காட்டி, நாட்டிலுள்ள எல்லார்க்கும் நன்மையே தருகின்ற திருப்பராய்த்துறைத் தலைவனே! காவிரி மீனைப் போன்ற அடியேனின் பாவங்களைப் போக்குவாயாக.

*தெளிவு:-*

காவிரி மீனும் நெற்றிக் கண்ணனைப் புகழ்ந்துபாடும். வினை தீர்க்க வேண்டி எல்லா உயிர்களும் விண்ணப்பம் செய்யும். நாம் மட்டும் என்ன ?

41. *மீனேந்தும் கண்ணாளை மிகவேந்தும் திருமேனி*
*தானேந்தும் உமையாளின் தாரேந்தும் மார்போடு*
*வானேந்தும் கங்கையவள் வளமேந்தும் பெம்மானே*
*மானேந்தும் கரத்தாலுன் மடியேந்தி வாழ்த்துகவே!*

பொருள் :-

மீன்போன்ற கண்களையுடைய உமையம்மையைத் தாங்கும் அழகிய உடல், அந்த அன்னையின் மாலைகளையும் தாங்கும் மார்பு, வானநதியாம் கங்கையின் அழகைத் தாங்கும் தலை யாவும் கொண்ட பரம்பொருளே! மானேந்தியுள கைகளால் என்னை மடியிலேந்தி அருள்கூட்டி வாழ்த்துகவே !

தெளிவு :-

உலக நாயகன் உலகைப் புரப்பவன்; நம்மையும் பாதுகாப்பான். அவனருளைப் பெற ஆவன செய்தல் வேண்டும்.

42. *வேல்கொண்ட குமரனவன் விரும்புகனி கிடைக்காமல்*
*மால்கொண்டே அமர்வித்த மாயங்கொள் மணிச்சுடரே!*
*சூல்கொண்டு சுழல்முகில்சூழ் பராய்த்துறை நிரந்தென்றும்*
*கால்கொண்டு கருணைமழை பொழிவிப்பாய் கறைக்கண்டா!*

பொருள் :-

திருக்கரத்திலே வேலினைப் பெற்ற குமரக்கடவுள் ஞானப்பழம் கிட்டாமல் வருத்த முற்று மலைமீது அமரச்செய்து மாயங்களைப்புரியும் கறைக்கண்டனே! நீரைச் சுமந்து சுழன்று வரும் மேகங்கள் சூழ்ந்த திருப்பராய்த்துறையில் எழுந்தருளி எமக்குக் கருணை மழை பொழிவீராக !

தெளிவு :-

வெற்றிமாளிகை எழுப்பத் தோல்வியும் ஓர் அடித்தளமாகலாம். ஞானப்பழம் பெறாத தம்மகனையே ஞானப்பழம் ஆக்கியவன் சிவன்.

43. *கால்கொண்டு நடம்புரியும் கண்ணுதலார் திருப்பாதம்*
*மேல்கொண்டு தானெழுப்பி மேலவரெல்*
*லாம்போற்றப்*
*பால்உண்ட வாய்கொண்டு பாடியருள் ஞானியர்போல்*
*நூல்கண்டே அடிசேர்க்க நுவலுதிறம் ஈந்திடுக!*

*பொருள் :-*

தில்லையிலே நடம்புரியும் நெற்றிக்கண் பெற்ற இறைவனின் திருப்பாதங்களின் மீது பற்றினை மேம்படுத்தி, மேலானவர்கள் யாவரும் போற்றுமாறு,ஞானப்பால் உண்ட ஞானசம்பந்தர் முதலான ஞானியர்களைப் போல் அடியேனும் நூல்கள் பல படைத்து நின் திருவடி சேர்க்க வல்ல திறத்தை இறைவா தந்தருள்க !

*தெளிவு:-*

அரிய செயல்களைச் செய்பவர்கள் மேலானவர்கள். மேலானவர்கள் போற்றுமாறு நல்ல பணிகளில் ஈடுபட்டுப் பயன்பெறுதல் வேண்டும். அதற்கு நாம் இறையருளை நாள்தோறும் இறைஞ்ச வேண்டும்.

44. *அடியார்க்கும் அடியவராய் அன்பதனை மெய்ப்பிக்க*
*முடிந்தார்க்கும் முடியாத நிலை தந்து சோதிப்பாய்*
*படியார்க்கும் படிகின்ற பாங்களிக்கும்*
*பராய்த்துறையான்*
*அடிவீழ்ந்து மலர்தூவி அன்றாடம் நான்தொழுவேன்.*

*பொருள் :-*

பரம்பொருளே! அன்பர்கள் நும் மீது கொண்டுள்ள பேரன்பை உலகிற்கு மெய்ப்பிக்க அடியவர் வடிவில் அவர்தம் இல்லம் செல்வீர்; முடிந்த போதெல்லாம் வழங்கி வறுமையுடன் வாழும் அடியார்க்கு உதவ முடியாத நிலையை உண்டாக்குவீர்; பணியாத மனம் கொண்டார்க்கும் பணிகின்ற பக்குவம் தருவீர். உம்மைத் திருப்பராய்த் துறையில் கண்டு திருவடியில் மலர்கள் தூவித்தினமும் வணங்குவேன்.

*தெளிவு:-*

அடியவர்க்கு அடியவராய், வறியவர்க்கு உரியவராய்ப் , பணியாதாரைப் பணிவிப்பவராய்த் திகழ்பவர் பரம்பொருள்.

45. *நான்முகற்கும் மாலவற்கும் நாயகனாய் நின்றனையே*
*ஊன்அழிக்கும் விடமேற்கும் உயர்நோக்கில்*
*சென்றனையே*
*கானிருக்கும் அரக்கர்தமைக் கால்விரலால்*
*கொன்றனையே*
*தேனிருக்கும் சுவையெனக்குத் தினமிருக்க*
*அருள்வாயே !*

பொருள் :-

முதற்பொருளே! திருமாலுக்கும் நான்முகனுக்கும் தலைவனாய்த் திகழ்ந்தாய்; உயிர்களை அழிக்கவல்ல விடத்தை உண்ணும் உயர்ந்த நோக்கம் கொண்டாய்; காட்டில் மறைந்து கொடுமைகள் செய்யும் அரக்கர்களை அழித்தாய்; ஆதலின் தேன்சுவை போன்ற இன்பம் என்வாழ்வில் நிலைத்திருக்க அருள்புரிவீராக!

தெளிவு:-

முதன்மையாயிருக்கத் திறமையை வளர்த்துக் கொள்வதும், பிறருக்கு உதவும் பெருந்தன்மை பெறுவதும், கொடுமைகளைக் கண்டு கொதித்து எழுவதும் மானிடர் பெற வேண்டிய மாண்புகள் ஆகும்.

46. *அருள்வார்க்கும் திருநோக்கில் ஆரூர்கொண்*
*டாடியதும்*
*மருள்நீக்கும் ஐயாற்றுக் கப்பருக்காய் ஓடியதும்*
*பொருள்கேட்டுச் சுந்தரரைப் போய்நீவா தாடியதும்*
*தெருள்வார்க்குத் தெளிவளிக்கத் திருத்தொண்டர்*
*தேடியதோ?*

பொருள் :-

மக்களுக்கு அருள்கூட்டும் நோக்குடன் திருவாரூரில் எழுந்தருளியிருப்பதும், மயக்கம் போக்கத் திருவையாற்றில் திருநாவுக்கரசர்க்குக் காட்சி தந்ததும். சுந்தரரின் திருமண வேளையில் தமக்குச் சேர வேண்டிய பொருள் கேட்டு வாதாடியதும் தெளிவுப்படுத்தச் சேக்கிழார் தேடிய பரம் பொருளே! நீ தான்.

தெளிவு:-

இறைவன் எங்கும் நீக்கமற எழுந்தருளும் இயல்புடையவன். உளமாரப் பணிவாரை உயர்விக்கும் பொறுப்புடையவன்.

*47. தேடியதோ காவிரியின் தென்கரையைத் தேவியுடன்*
*கூடியதோ கொள்ளையின்பம் கூடியதால் கூடிவினை*
*யாடியதோ ஆசைகொள அழகுதமிழ்ப் பண்கலந்து*
*பாடியதோ பராய்த்துறையான் திருப்பாதம்*
*யாண்டய்யா?*

பொருள் :-

அன்னை பராசக்தியுடன் சேர்ந்து தங்கிடக் காவிரியின் தென்கரையில் தேடியடைந்த தலம் திருப்பராய்த்துறை. அன்பர்கள் மிகுந்த இன்பத்துடன் கூடித் தொழுது மகிழ்ந்த தலம் திருப்பராய்த்துறை. அழகு தமிழில் பாடல்கள் பாடிப் பரமனின் திருப்பாதம் பரவுவதும் திருப்பராய்த்துறையே!

தெளிவு:-

மகாதேவனும் உமாதேவியும் கோயில் கொண்டுள்ள திருத்தலங்கள் யாவும் அன்பர்க்கு இன்பம் கூட்டும், பாடல்களால் வணங்கும் பக்தர்க்கும் பேரின்பம் கொடுக்கும்.

*48. யானெனதென் செருக்கறுப்போய் யாவுலகும்*
*அழுக்கறுப்போய்*
*கூனலுள மாந்தருக்குக் கொள்கைவிளக்*
*கேற்றுவிப்போய்*
*ஈனகுண நாயேனின் இன்னலெலலாம் நீங்கிடவே*
*வானமதி செஞ்சடையோய் வாழ்வுயர மதியளிப்பாய்.*

பொருள் :-

வான்நிலவைச் சடையில் பெற்றுள்ள பெருமானே! நீ யான் எனது என்னும் ஆணவத்தைப் போக்குவாய்; தீய மனம் படைத்த மாந்தரின் இயல்பைத் திருத்துவாய்; கொள்கையற்றவர்க்குப் பேரொளி வழங்கி மாற்றுவாய்; இழிகுண நாயேனுக்குத் துன்பம் தவிர்த்து வாழ அறிவை வழங்குவாயாக !.

தெளிவு:-

யான் எனது என்ற ஆணவப்போக்கு மாந்தர்க்கு உயர்வைத் தராது; செருக்கற்ற சிறந்த பக்தியே மேன்மையைக் கொடுக்கும்.

49. *மதிநாறும் மாமதுரைத் தாய்க்கையால் பிட்டுண்டு*
*நதிசீறும் வெள்ளத்தில் நாயகனாய்ப் புரண்டிட்டுப்*
*பதியாளும் பாண்டியரின் பிரம்பாலே தாக்குண்டு*
*விதிகாட்டிக் கதிசேர்க்கும் விமலா நீ விழிதிறவாய்*

*பொருள் :-*

அறிவு தவழும் மதுரையில் முதியவள் கையால் பிட்டுண்டு, வைகை வெள்ளத்தில் நீந்தி விளையாடிப், பாண்டிய மன்னனின் பிரம்பாலே தாக்குண்டாய், வினைப்பயனை உணர்த்தி நல்வாழ்வு காட்டும் குற்றம் அற்றவனே! இறைவா! அருள் கண்களைத் திறந்து நல்வாழ்வு தருவீராக !

*தெளிவு :-*

தாயுமானவன் தாய்க்கு அன்பு மகனாவான்; எல்லார்க்கும் முதல்வன் கடமை செய்யும் பணியாளாவான். உலகாளும் மன்னன் நாடாளும் மன்னனிடம் உயர்வு தாழ்வு அகலக் கைகட்டி நின்றான்.

50. *வாயிருக்கும் பாமலர்கள் வடித்திருந்த பாவலர்கள்*
*நீயிருக்கும் இடத்தருகே நினைவிருக்கும் என்றேங்கித்*
*தாயிருக்கும் மகிழ்வோடே தரணியெலாம் வலம்*
*வந்தார்*
*சேயிருக்கும் நிலைகண்டே செங்கரன்கை*
*வினையோக்கும்*

*பொருள் :-*

நாவில் நடமிடும் தமிழால் பாடல்கள் படைக்கும் கவிஞர்கள் தாய்போன்ற கனிவுடைய இறைவன் குடிகொண்டிருக்கும் இடமெல்லாம் தம் நினைவைச் செலுத்தி வையத்தை வலம் வந்தனர். அடியவர்களைக் குழந்தைகளாய்க் கருதிச் சங்கரனின் திருக்கரம் பாவங்களைப் போக்கும்.

*தெளிவு :-*

வையமே இறைவன் வடிவம். பார் முதலான பஞ்சபூதங்களும் பரம்பொருளில் அடக்கம்.

51. *வினைபோக்கும் அருளோடு விளையாட்டில்*
*களிக்கின்ற*
*உனைநோக்கி நான்கூவும் ஒருகோடி ஓலங்கள்*
*பனைநோக்கில் எமைவாட்டும் பருவரலாம் ஈட்டங்கள்*
*தமை நீக்கும் பராய்த்துறைவாழ் தாருருவே!*
*இரங்குமினே!*

பொருள் :-

பக்தரின் பாவம் போக்கும் அருளுடன் பல விளையாட்டில் ஈடுபட்டு மகிழும் இறைவா! நான் உன்னை நோக்கி எழுப்பும் ஓலத்தைக் கேட்டுப் பனையளவாய் எம்மை வாட்டும் துன்பங்களைப் பார்த்து அவற்றை நீக்கத் தாருகாவனத் தலைவா! தாம் இரக்கம் கொள்வீராக!

தெளிவு :-

அபயக் குரல் கேட்டு அடைக்கலம் தருவதும், பனையளவு துயரைத் தினையளவாக்கி அறவே நீக்குவதும் அவன் கருணை. பலமுறை அவன் திருநாமம் ஓதிக் கொண்டேயிருத்தலும் பாவங்கள் அகல வழியாம்.

52. *தாருருவே! இரங்குமினே தாழ்வெண்ணி*
*மிகத்துடிக்கும்*
*ஊருலக மாந்தரினை உயர்விக்கும் மனம்கொண்டே*
*காருதவி கண்டுமுகம் களிப்பெய்தும் பயிரேபோல்*
*நீருதவக் கண்டுமனம் நீணெடுநாள் மகிழ்வோமே!*

பொருள் :-

தாருகாவனப் பரம்பொருளே! மக்கள் தம் வறுமையை எண்ணி வருந்தி வாழ்கின்றனர். அவர் வாழ்வு உயரச் செய்யும் நோக்குடன் தாங்கள் இரக்கம் கொண்டு செய்யும் உதவிகளைக் கண்டு, மேகம் மழையாகப் பொழியும் உதவியைப் பெற்றுச் செழிக்கும் பயிர்களைப் போல் காலமெல்லாம் மகிழ்ச்சி அடைவோம்.

தெளிவு :-

மழைபெற்ற பயிரும், இறைவன் அருள்பெற்ற உயிரும் வளம் பெறும். பயிர்த்தொழில் உடலோடு; உயிர்த்தொழில் வழிபாடு.

53. நீணெடுநாள் அச்சமும் நீங்குமோ நின்கருணை
பேணிடவும் பேராற்றல் கூடுமோ வெண்ணீறு
பூணவுமே வெவ்வினைகள் போகுமோ
பராய்த்துறையில்
காணவும்கண் கோடியென வேண்டுமோ தாருகேசா!

பொருள் :-

தாருகாவனத்திறைவா! நீண்டகாலம் யான்பெற்றுள்ள அச்சம் நீங்குற்கு நின் துணையை வேண்டித் துதிக்கும் மனவலிமை கூட வேண்டும். தூய்மையான திருநீற்றை அணிந்தால் பாவங்கள் அகலும். திருப்பராய்துறையில் நின்னை வழிபட்டு மகிழக் கோடிக்கணக்கான கண்கள் வேண்டும்.

தெளிவு:-

வெண்ணீறு அணியப் பெற்றால் சிவன் கருணை கிட்டும். அவன் அருள் கிடைக்கப் பெற்றால் உள்ளத்துள்ள அச்சங்கள் யாவும் விலகிப் போகும். இறையருளைப் பெற இரண்டு கண்கள் மட்டும் போதா.

54. தாருலவும் தகைமலர்கள் சேர்ந்திலங்கத் தானியங்கும்
நாருலவும் நனிமணத்தைப் போலுலகில் நானுலவத்
தேருலவும் வீதிகள் சூழ் திருக்கோயில் சூழவந்து
பாருலவும் பராய்த்துறையான் பாதங்கள் பணிவேனே!

பொருள்:-

மாலையில் திகழும் நல்ல மலர்கள் பலவற்றைத் தொடுப்பதற்குப் பயன்படும் நாரிலே திகழும் மணத்தைப் போன்று உலகில் யான் புகழுடன் வாழத் தேர் ஊர்ந்து செல்லும் வீதிகளைப் பெற்றுள்ள திருப்பராய்த்துறையில் கோயில் கொண்டுள்ள உலக நாதனின் ஆலயத்தை வலம் வந்து அவன் திருவடிகளை வணங்குவேன்.

தெளிவு :-

ஊர் வணங்கக் கோவிலும் தேர் இயங்க வீதியும் அமைதல் சிறப்பு. மக்கள் வந்து தரிசனம் பெறுவதற்குக் கோயில். இறைவன் சென்று தரிசனம் தருவதற்குத் தேர்.

*[illegible]*
*நாதமா யிருந்து நாடகத்தை நடத்திட்டாய்*
*வேதமா யிருந்து வினைதீர்க்கும் பெருமானே !*

*பொருள் :-*

பெருமானே! திருவடிபணியும் திறமறிந்து இனிய பாடல்கள் படைத்திட்ட சிவனடியார் கருத்தினிலே எண்ணாயும் இனிய பண்ணாயும் இருந்து பல திருவிளையாடல்களைப் புரிந்தவன் நீ. தீவினைகளைப் போக்க வல்ல வாழ்க்கைக்குப் பொதுமறையாக இருப்பவனும் நீயன்றோ !

*தெளிவு :-*

கீதமாயிருந்து கேட்பதும், நாதமாயிருந்து நடம்புரிவதும் வேதமாயிருக்கும் நாதனின் பாதமே! அதனை வணங்குவோர் வாழ்வில் வளமுருவாகும்.

*56. பெருமானே! திருவுருவில் பெண்பாதி அணிவித்தாய்;*
*திருமாலைப் பெண்ணாக்கி நின்னாவல் தணிவித்தாய்;*
*ஒரு மாதைச் சடைமீதில் உலகறிய அமர்வித்தாய்;*
*பெருமாதால் நடமிட்டாய் திருவாலங் காட்டிடையே !*

*பொருள் :-*

இறைவா! நின் அழகிய உடலில் மலைமகளுக்கு இடம் தந்துள்ளாய். திருமாலைப் பெண்ணாக்கி மணிகண்டனைத் தோற்றுவிக்க நீ கொண்ட விருப்பத்தை நிறைவேற்றினாய்; உலகறியக் கங்கையைச் சடையில் இருக்கச் செய்துள்ளாய்; காரைக்கால் அம்மையாருக்காகத் திருவாலங்காட்டில் நடனமாடினாய்.

*தெளிவு :-*

பெண்ணுரிமை பேணுகின்ற பெருமான். ஆண்மைக்குள் பெண்மையும் அடக்கம் என அகிலத்திற்கு உணர்த்திய பரம்பொருள்.

*57. காட்டிடையே மான்கன்றைக் கலக்குறச்செய்
கடுமாப்போல்
வேட்டைவெறி யாட்டமிடு வீணர்களின் பிடியிருந்து
மீட்டெடுத்தே எமைப்புரக்கும் மேலவனைப்
பராய்த்துறையாம்
நாட்டிடையே நலம்புரியும் நாயகனைப் போற்றுவமே!*

பொருள் :-

திருப்பராய்த்துறையில் இருந்து நலம் தரும் தலைவனே! காட்டில் மான்மறிகளை நடுங்கச் செய்கின்ற கொடிய விலங்குகள் போல் நாட்டில் வேட்டையாடி வெறியாட்டம் போடுகின்ற வீணர்களிடமிருந்து எம்மை மீட்டுக்காக்கும் மேலான பொருளே! உம்மை வணங்குவோம்.

தெளிவு:-

விலங்குகளுக்குப் பசி தீர்ந்தால் வேட்டையாடுகின்ற வெறி தீரும். மனித விலங்குகளுக்குக் கொடூரப்பசியும் தீராது; கொலை வெறியும் மாறாது.

*58. போற்றுவமே போற்றாரும் போற்றும்வகை
பொழுதெல்லாம்
ஆற்றுவமே தோற்றாரின் தூற்றுமொழி
தொலைந்திடவே
மாற்றுவமே மாற்றார்மனம் மாற்றமுற நெற்றிக்கண்
சிற்றமுற மாற்றியதே நக்கீரன் செந்தமிழே!*

பொருள்:-

நம்மை மதிக்காதவரும் வியந்து போற்றுமாறு அவரை மதிப்போம். நம்மிடம் தோல்வியடைந்தவரின் அடாத மொழிகளை மறந்து பொறுத்துக் கொள்வோம். பகைவரின் மனத்தையும் நல்லவழியில் மாறச் செய்வோம். நக்கீரனின் தமிழால் மகிழ்ந்த சிவ பெருமான் தம் நெற்றிக் கண்ணைச் சிவக்கச் செய்தார் என்பதை அறிந்து வணங்குவோம்.

தெளிவு :-

பகைமையால் பிறர் கொண்டுள்ள மனப்பாங்கை நாம் நம் பொறுமையெனும் பண்பால் வெல்ல இறையருள் தேட வேண்டும்.

59. *செந்தமிழின் சீர்கொண்டு செஞ்சடையான் பேர்பாடும்*
*சுந்தரர்க்காய் வழிவிட்ட காவிரிபாய் ஐயாற்றின்*
*சொந்தமென வந்தமர்ந்த சுந்தரனே! ஐயாறா !*
*நந்தமிழன் நாவரசைக் காண்பித்தாய் நானிலத்தே!*

பொருள்:-

சிவந்த சடைகொண்ட சிவபெருமானைத் தமிழாலே போற்றிப் பாடியவர் சுந்தரர், அக்கரையிலிருக்கும் சிவாலயத்திற்குச் செல்ல விரும்பிய அவருக்குக் காவிரி வழிவிட்டது. அந்தக் காவிரி பாயும் திருவையாற்றிலும் உரிமையோடு வீற்றிருக்கும் அழகனே! ஐயாறப்பனே! அப்பருக்குக் காட்சி தந்து அவர் பெருமையை உலகிற்கு உணர்த்தினாய்.

தெளிவு :-

காவிரிக்கு வழி விடாதவர் இருந்தபோதும் சோழநாட்டிற்கு வழிகாட்டுவது காவிரி. திருச்சிக்கருகில் காவிரியின் தென்கரையில் திருப்பராய்த்துறை. தஞ்சைக் கருகில் காவிரியின் வடகரையில் திருவையாறு. இரண்டும் சிவஸ்தலம்.

60. *தேம்பியழும் குழந்தைக்குத் தேறுதலைத் தந்தவன் நீ;*
*கூம்பிவிழும் மலருக்கும் கூறுகளைத் தந்தவன் நீ;*
*பாம்புதிரு நடனமிடப் பைங்கழுத்து தந்தவன் நீ;*
*யாம்புலம்பும் ஓசைமட்டும் நின்செவிகள் கேளாவோ ?*

பொருள் :-

எம்பெருமானே! நீ தேம்பி அழுகின்ற குழந்தைக்கு ஆறுதலைத் தந்தவன்; கூம்பிவிழுகின்ற மலர்களால் மீண்டும் செடிமரம் இலை கிளை எனப் பல கூறுகளைத்தருபவன்; நாகம் தவழ்ந்து விளையாட அழகிய கழுத்தைத் தந்தவன்; யாம் துயரத்தால் புலம்புவது நின் செவியில் விழவில்லையா ?

தெளிவு :-

அழும் குழந்தைக்கு ஆறுதலும், விழும் மலருக்கு மறுபிறவியும், தொழும் மானிடர்க்குத் திருவருளும் வழங்குபவன் இறைவன்.

61. *ஓய்வினையே பெருக்கிட உடலுழைப்பினையே*
*சுருக்கிய*
*வாய்வினையே ஏற்கவோவாய் வாழ்வினையே*
*கழிக்கின்ற*
*மெய்வினைகள் மாந்தருள்ளே பிறந்தமைக்கு*
*வருந்துகிற*
*நாய்வினையேன் நலம்வேண்டி நாள்பலவாய் நான்கூவ.*

*பொருள் :-*

உடலுழைப்பைக் குறைத்து ஓய்வெடுப்பதையே பெரிதும் விரும்பி வீண்பேச்சில் வீண்பொழுது போக்குவதும் பிறரை அச்சுறுத்தி வாழ்வதுமான மனித இனத்தில் பிறந்த நாயேனின் நலத்துக்காகப் பல நாளாய்க் கூவித் திரிகின்றேன்.

*தெளிவு :-*

உழைப்பின்றி இருப்பதும் வீண்பேச்சில் காலம் கழிப்பதும் பிறருக்குக் துயரிழைப்பதும் இறைவனாலும் ஏற்றுக் கொள்ள முடியாதனவாம். அவன் திருவருள் வேண்டித் திருக்கோயில் சென்று திருநாமம் சொல்லி உரக்கக் கூவினால் உயர்வாழ்வு அமையும்.

62. *கூவக் குயில்பறக்கும் கொடிமுல்லைச் சோலையிலே*
*தாவக் கிளைபார்க்கும் தனிக்கவியைப் போலின்பம்*
*மேவச் சிற்றின்ப மாக்கடலில் வீழ்ந்துபிறர்*
*நோவக் குழிபறிக்கும் நோய்தீர்க்க வாரீரோ ?*

*பொருள் :-*

குயில்கள் கூவித்திரிகின்ற முல்லை மலர்க்கொடிகள் நிறைந்த சோலையில் மரங்களின் கிளைகளில் தாவித்திரியும் குரங்குகள் போலே வாழ்வில் இன்பம் எனக் கருதிச் சிற்றின்பக் கடலில் வீழ்ந்து பிறரையும் துயரில் ஆழ்த்துகின்ற கொடிய காம நோயைத் தீர்க்க வரவேண்டும் இறைவா !

*தெளிவு :-*

ஒருவன் பெறும் சிற்றின்பம் பலரைப் பெருந்துன்பத்திற் குள்ளாக்குகிறது. காமத்தை எரிக்க வல்லவன் அவன் ஒருவனே! தூய வழிபாடு ஒன்றே

63. *ஓயாத அலைகூட ஓங்காரப் பாட்டிசைக்கும்*
*பாயாத நதிகூடப் பயிர்க்குமழை கேட்டிசைக்கும்*
*காயாத மரங்கூடக் காற்றொடுதா லாட்டிசைக்கும்*
*தாயாக நீயிருந்தால் தமிழொடுபண் கூட்டிசைக்கும்.*

*பொருள் :-*

ஓயாமல் கரைதாக்கும் அலைகூட ஓங்காரமெனும் இசையைப் பாடிக்கொண்டே இருக்கிறது. பயிருக்கு நீர் வழங்க இயலாத நதிகூட மழை வேண்டிப் பாடிக் கொண்டே யிருக்கிறது. காய்க்காத மரங்கூடக் காற்றொடு சேர்ந்து உயிர்கள் வாழத் தாலாட்டுப்பாடல் பாடிக் கொண்டேயிருக்கிறது. தாயுமானவேன! தாயாக நீயிருந்தால் தமிழ்க்கவிதையும் மரபுடன் இசையும் பெற்று விளங்கும்.

*தெளிவு :-*

நாம் கேட்கும் இசையாவினும் ஓங்கார இசையே மூலமாய் முதலாய் மறைந்திருக்கும். நாம் இயற்றும் செய்யுள் யாவிலும் அவனருளே நிறைந்திருக்கும்.

64. *இசைக்குமொரு பாடகற்கும் எல்லையுண்டாம் ஆனாலும்*
*இசைக்குமொரு பேரெல்லை இலையன்றோஏற்றமுறத்*
*திசைக்குமொரு தெய்வத்தைத் தெரிவித்த போதும்புவி*
*அசைக்குமொரு சக்தியைநின் ஆடலிலே காட்டிடுக !*

*பொருள் :-*

பாடல் இசைக்கும் பாவாணர்க்கும் பாடி முடிக்கும் ஒரு காலமுண்டு. ஆனால் இசைக்கு முடிவே இல்லை. இப்புவியில் திசைக்குத்திசை தெய்வங்களைத் தோற்றுவித்து வணங்குகின்ற இவ்வேளையில், எம்பெருமானே! இவ்வுலகை இயக்க வல்லவன் நீ ஒருவனே என நின் திருநடனத்தால் தெளிவாக்கு வாயாக !

*தெளிவு :-*

எதற்கும் தோற்றம் என்று ஒன்றுண்டு; முடிவு என்பதும் உண்டு. தோற்றமும் முடிவுமற்றது அந்தப் பரம்பொருள் ஒன்றே.

*65. கட்புலனுக் கெட்டாத கருணைமுகில் கறைக்கண்டன்*
*கட்புலனே புலமூன்றும் காத்தருளும் கதிராகும்*
*மட்புலத்தின் மாட்சிமைக்குச் சான்றாகும்*
*பராய்த்துறைசூழ்*
*தட்புலத்தின்தவிப்பெல்லாம் தார்வேந்தே*
*தணிவிப்பாய் !*

பொருள் :-

கண்ணாலும் கண்டறிய முடியாத கருணை முகிலாகக் கறைக்கண்டன் திகழ்கிறார். அவர்தம் கண்களே மூவுலகிற்கும் ஒளியூட்டும் கதிராகும். மண்ணுலகத்தின் சிறப்பிற்குச் சான்றாகத் திகழும் திருப்பராய்த்துறையில் வாழும் உயிர்களின் துயரெல்லாம் தணிவிப்பவரும் தாருகாவனக்கடவுளே!

தெளிவு :-

சிந்தனைக்கும் எட்டாத சீர்மைக்கும் மூவுலகாளும் நேர்மைக்கும் முதன்மையானவன்; மண்ணுலக மாண்பைக் காக்க மானிடரின் துயரைப் போக்குபவன்; அவனே சிவன்.

*66. பாய்ந்தோடும் பைம்புனலில் பசித்தாடும் கதலியொடு*
*சாய்ந்தாடும் கதிர்நெல்லும் சதிராடும் சுவைக்கனலும்*
*ஓய்ந்தாடும் போதுழவர் உளமெல்லாம் மகிழ்ந்தாடும்*
*ஆய்ந்தாடும் அடியவர்க்குப் பேரின்பம் நீதானே!*

பொருள் :-

பாய்ந்து ஓடும் நதிநீரில் வளர்ந்து செழிக்கும் வாழையும், விளைந்து முற்றிச் சாய்ந்திருக்கும் நெற்கதிரும், முற்றிய செருக்கில் காற்றிலசையும் கரும்பும், முதிர்ந்து பயன்தரும் போது உழவர் தம் உள்ளமெல்லாம் மகிழும். நின்னைத்தேர்ந்து பக்தி கொண்டாடும் அடியவர்க்குப் பேரின்பமாய்த் திகழ்கின்றவன் எம்மீசனே, நீயன்றோ?

தெளிவு:-

உழவர் உள்ளம் பயிரில் திகழும். இறைவன் உள்ளம் உயிரில் திகழும். அடியவர் உள்ளம் பக்தியில் மகிழும்.

*67. தானேறு விடைமீதில் தண்ணேறு குழல்மீதில்*
*மீனேறு விழியாளை மிதமேற அமர்வித்தாய்*
*கூனேறு மதியாளைக் கொண்டதிருச் சடைமீதில்*
*வானேறு நதியாளை வாழ்விக்கும் பேரழகே!*

*பொருள் :-*

தாருகாவனப் பேரழகே! குளிர்ச்சியான கூந்தலை நோக்கிப்பாயும் மீன்போன்ற விழி கொண்ட உமாதேவியைத் தம் வாகனத்தில் உம்முடன் அமரச் செய்துள்ளீர். வளைந்த பிறைநிலவுப் பெண்ணையும். வானதியாம் கங்கா தேவியையும் நும் திருச்சடையில் அமரச்செய்துள்ளீர்.

*தெளிவு :-*

இயற்கையின் கூறுகள் யாவும் இறைவியின் வடிவம். ஆண்மையின் வினைகள் யாவற்றுக்கும் துணை நிற்பவர் துணைவியர். ஆண்மைக்கு வெற்றி தரும் வலிமையே பெண்மை தான்.

*68. கேட்டார்க்குக் கேட்டபொருள் கேட்டவுடன்*
*தருகின்றாய்*
*வேட்டார்க்கு வீடளிக்க வீடுவரை வருகின்றாய்*
*நாட்டார்க்குப் பொறுப்பேற்று நலம்பெருகும்*
*ஆட்சிசெய*
*மாட்டார்க்கும் நெறியூட்ட மனங்கொள்வாய்*
*தாருகேசா!*

*பொருள் :-*

வேண்டிக் கேட்டவர்க்கு வேண்டிய பொருள் உடனே தருகின்றீர்; வீடுபேற்றை விரும்பியோர்க்கு வீடளிக்க அவர்தம் இருப்பிடம் வரை வருகின்றீர். ஆட்சி செய்பவர்கள் மக்களுக்கு நன்மை செய்யாதிருக்கின்றனர். அவருக்கு நன்னெறி காட்டி அருள் தருவீராக தாருகேசரே!

*தெளிவு:-*

விரும்பியோர் யாவர்க்கும் வீடுகிடைக்காது, துறந்தாரும் தூய மனத்தாரும் ஆசையை அறவே ஒழித்துச் சிவச்சிந்தை கொண்டால் பிறப்பறுத்துப் பெரும்பேறெய்துவர்.

*69. தாருகேசா ! தண்மையொடு வெம்மையதும்*
*தாங்கிநிற்கும்*
*ஒருருவ மலைமீதில் உலகாள வீற்றிருக்கும்*
*மேருமலை நாயகனே! மென்குழலாள் தம்மோடு*
*சேருகவே பராய்த்துறை சிறியேனைக் காணுதற்கே!*

*பொருள் :-*

வெம்மையும் தண்மையும் அவ்வக் காலங்களில் வெளிப்படுத்தும் ஒரு பெரிய மலையான மேருவாம் இமயமலை மீதில் உலகாள வீற்றிருக்கும் இறைவனே! நீவிர் மெல்லிய கூந்தலைக் கொண்ட தேவியுடன் திருப்பராய்த்துறைவாழ் இந்தச் சிறியேனைக் காண வந்தருள்க!

*தெளிவு:-*

இன்பமும் துன்பமும் வாழ்வின் இரண்டு பக்கங்கள். உயர்வும் தாழ்வும் அவ்வப்போது நிகழவல்லன. ஆண்மை பெண்மை இரண்டெனினும் ஆன்மா ஒன்றுதான்.

*70. காணுதற்கே கண்கோடி வேண்டுமென்பார் இருக்கும்*
*கண்*
*பேணுதற்கே இயலாத பெரும்பாவப் பிறப்பெண்ணி*
*நாணுதற்கே கடத்துகிறேன் நாள்பலவும் திருநீற்றைப்*
*பூணுதற்கே மனங்கொள்ளப் போற்றியருள்*
*தரவேண்டும்.*

*பொருள்:-*

இறைவா! நின்னைக் காண்பதற்குக் கண்கள் கோடிக்கு மேல் வேண்டுமென்று கூறுவர். யாம் பெற்ற ஊனக் கண்ணைக் காக்க இயலாது தவிக்கும் ஈனப் பிறப்பையெண்ணி நாணத்துடன் நாள்கள் பல கழித்து வருகின்றேன். நின் திருவருளால் தினமும் திருநீற்றை அணியும் மனத்தைத் தந்தருள வேண்டும்.

*தெளிவு :-*

ஊனக்கண்காணும் உலகியல் இன்பங்களைத் தவிர்த்து அதனைக் கடந்த நிலையறியும் ஞானக்கண்பெற்று நலம் பெறுதல் நலம்.

*71. வேண்டும்எனக் கேளாமல் வீதிவழிச் செல்வோர்க்கும்*
*தூண்டுமனத் துடிப்புடனே தொண்டுசெயத்*
*தாம்விழையும்*
*மாண்டகைய சான்றோர்கள் மாரிகுணத் தான்றோர்கள்*
*யாண்டுளரோ? என்றளாவிக் கேட்பதுதான்*
*பராய்த்துறையோ?*

பொருள்:-

உதவி வேண்டும் என்று கேட்காமல் வீதி வழியாகச் செல்வோர்க்குத் தாமே வலியச் சென்று தொண்டு செய்யத் தூண்டுகின்ற மனத்துடன் வாழும் மாண்புமிக்க சான்றோர்களும், பயன்கருதாமல் வழங்கும் மழைக்குணம் கொண்ட உயர்ந்தோர்களும், எங்கு உள்ளனர்? என்று கேட்டு அறிந்து கொண்ட ஊர்தான் திருப்பராய்த்துறை.

தெளிவு:-

எளியவரின் முகக்குறிப்பறிந்து எதிர்பார்ப்பேதுமின்றி உதவுதலே உதவி. அந்த மனம் அனைவருக்கும் அமையாது. அவனருள் பெற்றார்க்கு ஈகைக்குணம் இயல்பாய் அமையும்.

*72. ஓதாமல் கழிக்கின்ற ஒருநாளும் வாழ்நாளில்*
*தீதாகக் கழிக்கின்ற திருநாளாம் பின்னொருநாள்*
*கோதாகப் போகின்ற வெங்காயச் சரக்கெண்ணிப்*

*போதாறும் நின்புகழைப் போற்றித் துதிப்பேனே !*

பொருள்:-

இறைவா! நின்புகழைப் போற்றாமல் கழிக்கின்ற ஒவ்வொரு நாளும் வீணாகக் கழிக்கின்ற நாள் மேலான நாள்களில் ஒன்றாம். பின்னொரு காலத்தில் சக்கையாகப் போகின்ற வெம்மை மிக்க இந்த உடலை எண்ணி ஆறுகாலமும் நின்புகழைப்போற்றி வணங்கி வருகின்றேன்.

தெளிவு:-

மானிட உடல் மண்ணோடும் விண்ணோடும் கடைசியில் காற்றோடும் கலக்கப் போவது திண்ணம். ஆன்மா ஒன்றுதான் அப்பரம்பொருளோடு ஐக்கியமாவது.

*73. ஏராளும் உழவருக்கும் ஏராள நிலமிருக்கும்*
*பாராளும் மன்னருக்கும் பயனுறுபடைக் கலமிருக்கும்*
*பேராளும் கவிஞருக்கும் பெருநிலையும் காத்திருக்கும்*
*சோர்வாளும் மதியேற்கு நின்னருளே கதியாமே*

*பொருள்:-*

ஏர்த்தொழில் புரியும் உழவர்க்கு உரித்தான நிலம் மிகுதியாயிருக்கும். நாட்டை ஆளும் அரசர்க்கு வெற்றிபெற்றுத் தரும் படைக்கலங்கள் பல இருக்கும். பெருமைமிக்க பாவலர்க்குச் சிறப்பான எதிர்காலம் காத்துக் கொண்டிருக்கும். சோர்வினையே கொண்டிருக்கும் கீழான அறிவுடைய அடியேனுக்கு, இறைவா நின்னருளே துணையாயிருக்கும்.

*தெளிவு:-*

உழவர்க்கு நிலமாயும், அரசர்க்குக் கலமாயும், கவிஞர்க்குப் புகழாயும் இருப்பவன் எவனோ அவனே நமக்கும் நல்லறிவு தந்து நற்கதியையும் வழங்குபவன்.

*74. கதியாமே பராய்த்துறையான் கடைக்கண்கள் அடியேனின்*
*விதியாலே வினைத்துயர்க்கண் வீழ்ந்துழல நேர்ந்துள்ளேன்*
*மதியாளும் பெருமானே மனையகத்தே நிற்கின்றேன்*
*நதிசூடி விளையாடப் புறப்பட்டாய் மழபாடி*

*பொருள்:-*

அடியேனின் வினைப்பயனால் மிகுந்த துயரில் ஆழ்ந்து தவிக்கின்றேன். திருப்பராய்த்துறையில் எழுந்தருளியிருக்கும் பெருமானின் கடைக்கண்கள் தாம் பெருந்துணையாகும். நிலவைச் சூடிய பெருமானே! நின்னைக் காண ஆலயத்தே நின்று கொண்டிருக்கிறேன். ஆனால் நீ நதியைச் சூடி மகிழ்ந்து விளையாடத் திருமழபாடிக்குச் சென்றுவிட்டாயே!

*தெளிவு:-*

வினைத்துயரின் வெம்மையைப் போக்குபவனும் மாந்தரின் அறிவினை ஆள்பவனும் அவனே !

*75. இல்லாதார் இடும்பைகள் எல்லாமும் தீர்க்காமல்*
*கல்லாலின் கீழமர்ந்து கன்னெஞ்சன் ஆகாதே*
*சொல்லாமல் வந்திங்குச் சுடர்மிக்க விழி திறந்து*
*வல்லானே! வஞ்சகனின் வாஞ்சைக்கோர் வழிபுரிவாய்*

பொருள்:-

கல்லால மரத்தின் கீழ் அமர்ந்துள்ள பெருமானே! இல்லாமையால் துயருறும் எளியவரின்

துன்பங்களைத் தீர்க்காமல் கல்நெஞ்சனாகிவிடாதே! எவரும் எதிர்பாராதபோது

இங்குவந்து சுடர்வழியால் அருள்புரிய வல்லவனே! வஞ்சக நெஞ்சுடைய

அடியேனின் ஆசைக்கும் ஒரு வழிகாட்டுவாயாக!

தெளிவு:-

பொருளின்மையை உழைப்பின் வழி போக்கிக் கொள்ளலாம். அறிவின்மையைப் போக்கிக் கொள்ள ஆண்டவன் அருள் வேண்டுமன்றோ?. வஞ்சகத்தன்மை கொண்ட நெஞ்சத்தில் இறைவன் குடிபுகுவது இயலாததாகும்.

*76. வாய்முடிப் பிழைக்கின்ற வாக்காளர் கூட்டத்தில்*
*போய்த்தேடிக் குரைக்கின்ற போட்டிவேட் பாளர் மன*
*நோய்நாடித் தவிர்க்கின்ற நுட்பமெலாம் நீயறிவாய்*
*தாய்ஓடி அணைக்கின்ற தன்மையனைக் காவாயோ?*

பொருள்:-

தேர்தல் காலத்தில் ஒன்றுமறியா மக்களிடையே போய்ப் பலவாறு பேசி வெற்றிபெறும் வேட்பாளர்களின் மனத்திலுள்ள பேராசை எனும் நோயைத் தீர்க்கவல்ல நுட்பத்தை அறிந்த கடவுளே! தாயிடம் அன்புடன் தாவிச் செல்கின்ற குழந்தை போன்ற இயல்புடைய என்னையும் காப்பாயாக!

தெளிவு:-

பலவாக்களித்துப் பலருடைய வாக்கைப் பெற்று வெற்றியும் பெற்றபின் வாக்கை நிறைவேற்றாமல் தத்தம் செல்வாக்கை உயர்த்திக் கொள்கின்றனர். ஆண்டவனே இவற்றுக்குச் சாட்சி.

77. *ஓங்காரத் துட்பொருளாய் உலகோர்க்குத் தென்படும் நீ*
*ஆங்கார மில்லாமல் ஆறுமுக னிடம்கேட்டாய்*
*பாங்கான பாடத்தைப் பாருக்குப் புகட்டியுளாய்*
*தூங்காத கண்ணுடையேன் துயர் நீக்க வந்தருள்க !*

*பொருள்:-*

ஓங்காரத்தின் உட்பொருளான இறைவா! உலக மக்கள் கண்டு வியக்க நீயோ அதன் பொருளை முருகனிடம் பணிந்து கேட்டறிந்தாய். பணிவினைப் பற்றி உலகிற்குப் பாடம் கற்பித்தாய். உறக்கமின்றித் துயரில் தவிக்கும் கண்ணுடைய என்றன் துன்பம் போக்க வந்தருள்க!

*தெளிவு:-*

பணிவு என்பது பண்புகளில் சிறந்தது; இருப்பவர் முன்பு இல்லாதவர் பணிந்து பொருள் பெறுதல் போல் கற்பவரும் பணிந்து பயன் பெறுதல் நலம் தரும்.

78. *கவியாரக் குடைதாங்கித் தமிழாண்ட சீமான்*
*உழவாரப் படைதாங்தி உனையாண்ட கோமான்*
*உளமாரத் துதிக்கின்ற உயர்பொருளும் நீ; நான்*
*தினம்பாடும் குரல்கேட்டுத் திருக்கண்கள் திறவாய்!*

*பொருள்:-*

செய்யுளெனும் வெண்கொற்றக் குடைதாங்கித் தமிழை ஆட்சி செய்த செல்வனும், உழவாரத்தால் ஆலயத் தூய்மைப் பணியாற்றி இறைவா! உன்னையே ஆட்சி செய்த அரசனுமான திருநாவுக்கரசர் பெருமான் உளமாரப் போற்றுகின்ற உயர்ந்த பரம்பொருள் நீயே! யான் நாள்தோறும் பாடும் குரல் கேட்டுத் திருக்கண்கள் திறந்து அருள்புரிக!

*தெளிவு:-*

தாய்மொழியால் இறைவனைத் தொழுவது தனிப்பேரின்பம் தரும். தமிழை ஆண்டவர் இறைவனையும் ஆள்பவராம்.

79. *வாய்மைக்குப் பிறப்பிடம் வளர்மதிபோன் றன்புள்ளம்*
*காய்சின மற்றவாழ்க்கை கடுந்தவப் பலனின்மேல்*
*தூய்மைக்குள் எனைச்சேர்த்துத் தொண்டுள்ளம்*
*தரவேண்டும்*
*தாய்மைக்குத் தானாகும் தாருகா வனவேந்தே!*

*பொருள்:-*

தாய்மையன்புமிக்க தாருகாவனவேந்தே! வளர்பிறை போன்று அன்பு வளரும் உள்ளமே வாய்மைக்குப் பிறப்பிடம், பிறருக்குத் துயர் தரும் சினமானது நீங்கப்பெற்ற வாழ்வு தவவாழ்வினும் பலன்மிக்குடையது. அடியேனைத் தொண்டுகள் செய்யும் தூய மனத்தனாய் ஆக்க வேண்டும்.

*தெளிவு:-*

அன்புள்ளத்தில் வாய்மை நிலைக்கும்; வாய்மை நிலைத்த உள்ளத்தில் தூய்மை நிலவும்; தூய்மையுடையோர் தாய்மைப் பண்பைப் பெற்றிருப்பர்.

80. *தேவர்க்கும் தினம்தேடும் வினையாற்றும் கள்ளர்க்கும்*
*யாவர்க்கும் உவந்தீயும் அகமுடையார் நீரன்றோ ?*
*காவற்கும் அரணாகக் காவிரியைக் கொண்டவரே!*
*சேவற்கும் கொடியானைச் செங்கண்ணால் தந்தவரே!*

*பொருள்:-*

உயர்வாகக் கருதப்பெறும் தேவர்களுக்கும், நாள்தோறும் களவால் தேடிப் பெறுகின்ற வினை புரியும் கள்வர்களுக்கும் வேண்டிய பொருளை விருப்பமுடன் வழங்கும் மனங்கொண்ட பெருமானே! நீவிர் திருப்பராய்த்துறையில் காவிரியைக் காவல் அரணாகப் பெற்றுள்ளீர்; சேவற்கொடியானாம் செவ்வேளை நும் சிவந்த கண்ணால் உலகிற்குத் தந்தவராவீர்.

*தெளிவு:-*

தேவரும் கள்ளரும் தினமும் தொழுகின்ற தெய்வம் சிவனே என்பதை ஆன்மீக அகமுடையார் அனைவரும் அறிவர்.

81. *தந்தவரே பேரின்பத் தனிச்சுவையை மணப்போழ்தில்*
*சுந்தரரைத் தடுத்தாண்ட தோடன்றித் தமிழுக்குச்*
*சொந்தமெனச் சென்றங்கே சொல்லாடி எல்லார்க்கும்*
*பந்தமெனப் பறைசாற்றிப் பராய்த்துறைக்கே*
*வாருமய்யா!*

*பொருள்:-*

பேரின்பத்தின் தனிச்சுவையைத் தரணிக்குத் தந்தவரே! சுந்தரரின் திருமண வேளையில், அவரைத் தமிழுக்கு உரியவர் என்று வாதிட்டுத் திருமணத்தைத் தடுத்து ஆட்கொண்டதைப் போன்று திருப்பராய்த்துறைக்கும் வந்து எங்களை உறவென்று கூறிப்பறைசாற்றி ஏற்றுக்கொள்ளும்.

*தெளிவு:-*

தமிழ்ப்பணிக்காக எந்தப்பணியையும் தள்ளிவைக்கலாம்; முதற்பணி தாய்மொழிக்காகவே அமைந்திடின் மொழி காக்கப் பெறும்.

82. *யாதானும் நாடென்றும் ஊரென்றும் அன்றுசெந்நாப்*
*போதாரும் சொன்னாரே புவிமாந்தர்*
*உளங்கொண்டால்*
*வாதாடும் நிலைமாறும் வழக்கெல்லாம் கலைந்*
*தோடும்*
*தீதோட்டிப் பாராளும் திருப்பராய்த் துறைநாதா!*

*பொருள்:-*

தீமையற்ற உலகை ஆளும் திருப்பராய்த்துறைவாழ் இறைவா! எல்லாம் நம்முடைய ஊர் எனவும், யாவும் நம் நாடெனவும் அன்றே திருவள்ளுவர் சொல்லி இருக்கிறார். இதனைப் பூவுலக மாந்தர் உளத்திருத்தினால் வாதம் செய்யும் போக்கு மாறும்; வம்பு வழக்குகள் குறையும்.

*தெளிவு:-*

நம்முடைய நாடு, நம்முடைய ஊர் என்னும் பொது நோக்கு பூமியில் பொதுமையுணர்வை வளர்க்கும்; பகையழிக்கும்.

*83. தானோங்கி நின்றானைத் தண்ணளியால் மாலயனை*
*வானோங்கி வென்றானை வண்ணக் கிளிமொழியாள்*
*மீனோங்கும் விழியாளின் மேனியெழில் தாங்கியதால்*
*கோனாகி நின்றானைக் குவித்துக்கை தொழுவேனே!*

*பொருள்:-*

தாம் மட்டுமே உயர்ந்திலங்கும் தனியானவனை, அன்பாலே விசுவரூபமெடுத்துத் திருமாலையும் நான் முகனையும் வென்றவனை, வண்ணக் கிளியின் மொழிபேசும் மீன்போன்ற கண்களைக் கொண்ட உமாதேவியின் அழகிய மேனியைத் தன்மேனியில் தாங்கிய தலைவனானவனை யான் கைகளைக் குவித்து வணங்குவேன்.

*தெளிவு:-*

மிகுதியான் மிக்கவை செய்பவர்களை நாம் அன்பாலே வெற்றி கொள்ளலாம். இறைவியோடு இறைவனை இணையாய்க் கொண்டு வணங்குதல் வழிபாட்டில் நலம் பயக்கும்.

*84. தொழுவேனே புரமூன்றும் தொலைத்தானின்*
*திருப்பாதம்*
*விழுவேனே வெவ்வினைகள் விட்டகன்று வீடுபுக*
*அழுவேனே ஆனந்தத் தாண்டவந்தான் ஆடுகென்று*
*எழுவேனே தூயவனே எந்நாளும் பராய்த்துறையே!*

*பொருள்:-*

முப்புரங்களை எரித்து அழித்த பெருமானின் திருப்பாதங்களில் விழுந்து தொழுவேன்; என் கொடிய பாவங்கள் அகன்று வீடுபேறு அடைய விரும்பி ஏங்கிக் கண்ணீர் சிந்துவேன். ''இறைவா ஆனந்தத் தாண்டவம் ஆடுக!'' என்று திருப்பராய்த்துறையில் எல்லா நாளும் வேண்டுதற் பொருட்டு இரவெல்லாம் தங்கி எழுவேன்.

*தெளிவு :-*

முப்புரங்களை எரித்தவனை முழுமனத்துடன் தொழுதால் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் அழியும்.

*85. துறையேசீர் காவிரிபாய் நிலமேசூழ் பராய்த்துறையில்*
*மறையேகாண் துறைமாந்தர் மகிழ்வூட்டும்*
*அருள்வேந்தே!*
*நறையேபாய் மலர்சூடும் நாதன்திரு முடியோடும்*
*கறையேபாய் கண்டத்தான் கனிவேந்தும்*
*துணிவிடையே!*

பொருள்:-

இறங்கி நீராடும் சிறந்த படித்துறைகள் நிறைந்த காவிரிபாயும் நிலம் சூழ்ந்த திருப்பராய்த்துறையில் வேதங்கள் கற்றுத் துறைபோய சான்றோர்களை மகிழச் செய்யும் அரசனே! தேன்நிறைந்த மலர்களை அணிந்துள்ள திருமுடியோடு கறைக்கண்டனின் கருணையையும் தாங்கியுள்ளது அவருடைய காளை வாகனம்.

தெளிவு :-

பங்கீட்டு முறையில் நதிநீர் பயன்தரும் வகையில் பாய்ந்து வர அனுமதிக்க வேண்டும். ஒருவர் எத்தனை திறமைகள் பெற்றிருந்த போதிலும் உள்ளத்தில் அன்பும் பெற்றிருக்க வேண்டும்.

*86. விடையேறி நடமாடும் படநாகத் தடமார்பா*
*நடையேறித் தினமேநின் நலம்பாடி நிற்கின்றேன்*
*தடைமீறித் தாராயோ தமிழாளும் திறமெல்லாம்*
*படைமீறிப் பகையோட்டும் பராய்த்துறைப்*
*பெருமானே!*

பொருள்:-

படமெடுத்து ஆடும் நாகத்தைப் பெற்ற அகன்ற மார்புடனே, காளைவாகனத்தில் ஏறி உலகை வலம் வரும் சிவபெருமானே! ஆலய வாசலில் நாளும் நின்புகழ்பாடி நிற்கின்றேன். எதிர்த்து வரும் படைகளைத் தகர்த்துப் பகையழிக்கும் திருப்பராய்த்துறை நாதனே! இருக்கும் தடைகளைப் போக்கி எனக்குச் சிறந்த தமிழாற்றலைத் தரவேண்டும்.

தெளிவு:-

ஒருவர் எத்துறையில் உயர்வடைந்தாலும் தாய் மொழியில் தனித்திறன் பெற்றிருத்தல் மேலும் உயர்வைத் தரும். அத்திறம் பெற அவனருள் வேண்டும்.

87. *ஏகாந்த மாயிருந்தே எங்கெங்கும் காணுகின்ற*
*மாகாளி நாயகனே! மறைக்காட்டில் வீற்றிருந்து*
*நாகாத்த அரசரொடு ஞானசம்பந் தருக்கும்*
*நீகாட்டும் அன்பெனக்கும் நேர்பாதி கூட்டுகவே!*

*பொருள்:-*

ஒரே பொருளாய் உலகமுழுவதும் பரவிநின்று எங்கும் காட்சி தரும் பரம்பொருளே! மகாகாளியன்னையின் நாயகனே! திருமறைக்காட்டில் வீற்றிருந்த உன்னை வந்து வணங்கி அருள்பெற்ற திருநாவுக்கரசருக்கும் திருஞான சம்பந்தருக்கும் காட்டிய அன்பில் ஒரு பகுதியையேனும் எனக்கும் காட்டி அருள்புரிவீராக!

*தெளிவு:-*

கவிவேந்தர் இருவரும் பெற்ற சிவஅருளும், கவி அருளும் பெற விழையாதார் எவரும் இலர். கவித்திறம் பெறக் கடவுளைத் தொழுது மனத்தை அதன்கண் செலுத்துதல் வேண்டும்.

88. *வேந்தர்க்குச் சிறப்பென்றால் வெண்கொற்றக் குடைக்கீழாம்*
*மாந்தர்க்குத் தண்ணளியை மாமழையாய்ப் பொழிகுவதே*
*பூந்துருத்திப் பேரூரில் பொலிகின்ற பெருமானே!*
*யாந்துதிக்கும் பராய்த்துறைக்கும் அருள்மழைதான் பொழிவீரே!*

*பொருள்:-*

திருப்பூந்துருத்தியில் எழுந்தருளியிருக்கும் பரம் பொருளே! தம் ஆட்சிக்குட்பட்ட பகுதியில் வாழும் மக்களுக்கும் கருணையை மழைபோல் வழங்குவதே அரசர்களுக்குரிய சிறப்பாகும்.யாம்நாளும் வணங்கும் திருப்பராய்த்துறை யம்பதிக்கும் அருளாகிய மழையைப் பொழிவீராக!

*தெளிவு:-*

மக்களின் நலம் விரும்பிய மன்னராட்சிக்காலம் மாறி மக்களாட்சி மலர்ந்தும் மக்கள் நலம் மதிக்கப்படுவதில்லை.

*89. ஏழூர்த் திருத்தலத்தின் இயலெண்ணிச் சென்றங்கு*
*வாழுமடி யார்களுக்கு வாழ்வுதரும் பேரழகே!*
*கூழுக்கு வழியின்றிக் குணங்கெட்டுத் திரிகின்ற*
*பாழுமென்றன் பசியடங்கப் பழம்தருவீர்*
*பராய்த்துறையே!*

*பொருள்:-*

திருவையாற்றைச் சூழ்ந்துள்ள ஏழூர்ச் சிவத்திருத் தலங்களின் மேன்மை கருதிச் சென்று அங்கு வாழும் அடியவர்களுக்கு நல்வாழ்வு தரும் நாயகனே! உணவுக்கு வழியின்றி அலைந்து திரியும் என்றன் பாழும் பசி அடங்குமாறு பராய்த்துறைச் சோலையில் பழுத்த பழத்தையேனும் தந்தருளவேண்டுகின்றேன்.

*தெளிவு:-*

பாரில் சிறந்த அறம் பசித்தார் பசிபோக்குதல். சிவனடியார் பசி போக்கச் செல்வமெலாம் இழந்த அடியார்கள் பலர். பிறர் பசியை நாம் போக்கினால் நம்பசியை அந்த நாயகன் போக்குவான்.

*90. ஏமாற்றம் தாங்காத ஏழையர்பல் லாயிரம் பேர்*
*தாமாற்றும் தண்ணீழல் தாயன்பன் பொற்பாதம்*
*யாமாற்றும் தீவினைகள் யாரையுமே பாதியாது*
*நீமாற்றும் மாற்றங்கள் நேர்வழிக்குத் தான்பெருமே!*

*பொருள்:-*

சமுதாயத்தில் ஏமாற்றங்களைத் தாங்கமுடியாத பல ஆயிரம் எளியவர்கள் ஆறுதல் பெறும் நிழலே தாருகாவனக் கடவுளின் பொற்பாதமாகும். வாழ்க்கையில் யான் செய்யும் தீய செயல்களால் யாரும் துன்பமின்றி வாழப், பெருமானே! என் வாழ்வில் நீ செய்த பல மாற்றங்கள் நன்மைகருதியே ஆம்.

*தெளிவு:-*

ஏமாற்றத்தைத் தாங்கவல்ல இதய வலிமையைத் தரவல்லது இறைவன் அருளே. ஏமாற்றும் இயல்பை இறைவன் தருவதில்லை.

91. *மயிலேறி வலமாய் வந்தே*
*மாலின்மரு மகனாய் ஆகிக்*
*கயலேறு விழியாள் வள்ளிக்*
*காதல்மண மகனாய் ஆகிப்*
*புயலேறு குழலாள் ஆதி*
*சக்திக்கொரு மகனாய் ஆகி*
*அயலாரின் பகையைச் சாய்க்கும்*
*அறுமுகன் தந்தாய் நீயே!*

பொருள்:-

மெய்ஞ்ஞானக் கனியைப் பெறுகின்ற நோக்குடன் மயிலேறி உலகத்தை வலமாக வந்தவனாய்த் திருமாலின் மகளாகிய தெய்வயானையை மணம் புரிந்து கொண்டு அவருடைய மருமகனாகி, மீன்போன்ற அழகிய கண்களைக் கொண்ட குறத்திப் பெண்ணாகிய வள்ளியைக் காதல் திருமணம் செய்து கொண்டதால் அவளுக்கு மணவாளனாகி, நீர் நிறைவால் கறுத்துக் காணப்பெறும் திரட்சியான மேகம் போன்ற கூந்தலை உடையவளாம் அன்னை பராசக்தியின் இளையமகனாயாகி, சூரபத்மன் போன்ற பகைவர்களின் படையை வேரொடு அழித்து அவர்தம் பகையுணர்வை வீழ்த்தும் ஆறுமுகப்பெருமானின், தந்தையாய் நின்ற பரம்பொருள்தான் நீயன்றோ!

தெளிவு:-

ஒன்றை அடைய உரிய முயற்சி செய்தல் வேண்டும்; முயற்சி பலனளிக்காவிடினும் மனந்தளராது கொள்கைப் பிடிப்புடன் இருத்தல் வேண்டும்;. முயற்சி உடையவர் அதன் பலனைப் பெறுவர்.

*92. நீயேந்தும் சூலத் தோடும்*
*நீதிக்குப் பாதை போடும்*
*தீயேந்தும் விழியி னோடும்*
*தீமைக்குச் சூடு போடும்*
*வாயேந்தப் பாக்கள் பாடும்*
*வறியன்பா மாலை சூடும்*
*தாயேந்தும் அன்பி னோடும்*
*தக்கதோர் பிச்சை போடும்.*

பொருள்:-

எம்பெருமானே! நீர், நும் திருக்கரத்திலே ஏந்தியிருக்கின்ற திரிசூலத்தைக் கொண்டு, சமூக நீதிகள் பாதுகாப்பாக நடை போடுதற்கு இடையூறாய் இருக்கும் சிக்கல்களையும், தடைகளையம் அகற்றி நல்ல வழியை வகுக்கவேண்டும். தீப்பொறி சிதறும் தங்களுடைய கண்களின் ஒளியினாலே உலகில் தீயவர்களும், தீமைகளும் அழியுமாறு சூடுபோடவேண்டும். அடியேன் வாயால் பாடிவரும் அழகுதமிழ்க் கவிதைகளின் இனிமையை வியந்து ஏழையேனின் பாமாலையைச் சூடிக்கொள்ளவேண்டும். துன்பத்தாலே வாடிக் கொண்டிருக்கும் இந்தச் சிறியவனின் வேண்டுதலைச் செவியுற்றுக் குழந்தையிடம் தாய்காட்டும் அன்பைப் போன்று இரந்து நிற்கும் எனக்கு ஏற்றவற்றைப் பிச்சையாகப் போட்டுக்காக்க வேண்டும்.

தெளிவு:-

நீதியைக் காக்க நேரிய வழியில் பாடுபடுவது சிறப்பை நல்கும்; தீமைகளை அகற்ற வெகுண்டெழுதல் தவறன்று.

93. போடுவார் இரப்போர்க் கெல்லாம்
பொருளெலாம் இழந்த பின்னும்
மூடுவார்தம் துயரை நாளும்
முக்கண்ணன் அடியார் பாதம்
சூடுவார் தொண்டே செய்யத்
தூயனார் மாறன் என்றால்
நீடுவார் சடையாய் ஆங்கே
நின்றனை சான்று காட்ட !

பொருள்:-

தம்மிடம் வந்து உதவிகேட்டு யாசிப்பவர் யாவர்க்கும் பொருள்களை அள்ளி வழங்குவதும், வழங்கி வழங்கிப் பொருளெல்லாம் தீர்ந்து போன பின்பும் சற்றும் துன்பத்தை வெளிக்காட்டாமல் நாள்தோறும் சிவனடியார் திருவடிகளை வணங்கி அவர்க்கும் பணிவிடை செய்வதும் இளையான்குடி மாறநாயனாரின் பண்பாகும். சிவனடியார்க்குத் தொண்டு செய்து வறுமை நிலை எய்திய பின்னும், அடியவர்க்கு அமுது படைக்க நிலத்து விதைத்த நெல்லைக் கொணர்ந்து உணவை ஆக்கிய பேரருளாளர். அன்னாரின் சிவப்பற்றை உலகுக் குணர்த்த நீண்டசடையை உடைய எம் பெருமானே! நீ மாறனாரின் வீட்டு வாசலில் அடியவர் கோலம் தாங்கிச் சென்று நின்றாய்.

தெளிவு:-

இல்லை என்று வந்து இரப்பவர்க்கு வழங்குதலால் உண்டான வறுமை வறுமையாகாது. தாம் பசித்திருக்கும வேளையிலும் பிறர் பசி போக்க நினைப்பதுவே பெருந்தகைமை. தொண்டர் சீர்பரவுவார்க்குத் தொண்டனாய் நின்று இறைவன் அருள்புரிவான்.

*94. அறுசுவை யான நீயோ*
*அடியுண்டாய் பிட்டுக் காக*
*மறுசுவை வேட்கை யாலே*
*மாதுமைக்கை அன்னம் ஏற்றாய்*
*பெறுசுவை போதா தென்றே*
*கண்ணப்பர் பூசை ஏற்றாய்*
*தருசுவைக் கீடே யில்லை*
*தாருகா வனத்தின் கோவே!*

பொருள்:-

தாருகாவனத்தில் எழுந்தருளியிருக்கும் பராய்த் துறைநாதா! நீயோ அறுசுவைகளுமாக இருப்பவன். ஆயினும் பிட்டுணவிற்காக மதுரையிலே பிரம்படி பட்டாய்; மேலும் உணவு கொள்ளும் விருப்பத்தாலே அன்னபூரணியாம் உமையம்மையிடத்தில் உணவை ஏற்றாய் ; பெற்ற உணவுப் பொருள்களின் சுவை போதாதென்ற நோக்கில் திண்ணனார் என்னும் கண்ணப்பரின் பூசையில் படைக்கப் பெற்ற உணவுப் பொருள்கள் கிடைக்கப் பெற்றாய்; எத்தனைச் சுவைகளை நீ ஏற்றாலும் அன்பர்களாகிய எங்களுக்குத் தரும் அருளாகிய சுவைக்கு அளவே இல்லை.

தெளிவு:-

கல்விக்கு உரியவனாயினும் , கற்பிக்கும் பொறுப்பினனாயினும் கற்றுக் கொண்டேயிருத்தல் அவன் கடனாகும்; எல்லாமும் தாமாய் எண்ணியிருந்த போதும் தாம் எல்லார்க்கும் உரியோம் என்ற எண்ணமும் இருத்தல் வேண்டும்; சுவை வடிவானவன் சுவையறிய விழைதலும் இத்தன்மைத்தே.

*95. வேகமெலாம் மாற்றி னாலே*
*வினையெல்லாம் தூய்மை சேரும்*
*மேகமழைத் துளிகள் வீழ்ந்து*
*மேதினிதான் செழித்தல் போல*
*ஆகமெலாம் மாசு நீக்கி*
*அன்பர்பணி யாற்றி வாழ*
*நாகமணி மார்பன் தாளில்*
*நல்லதவம் கிடப்போம் யாமே!*

*பொருள்:-*

ஒருவர் தாம் கொள்ளும் சினத்தையும் கோபம்மிக்க உணர்வுகளையும் மாற்றியமைத்துக் கொண்டால் செய்யும் செயல்கள் யாவும் தூய்மையாகவே அமையும்; திரட்சியான மேகமானது பொழியும் மழையாலே பூமியில் உள்ள பயிர்களும் உயிர்களும் செழித்துக் காணப்பெறும். யாங்கள் எங்கள் உள்ளத்திலுள்ள தீய எண்ணங்களை நீக்கி அன்பர்களுக்கும் , அடியவர்களுக்கும் தொண்டு புரிந்து வாழ, நாகமானது படமெடுத்துக் காட்சி தரும் அழகான மார்பினையுடைய பெருமானின் திருவடிகளில் அருள்வேண்டித் தவமாய்க் கிடக்கின்றோம்.

*தெளிவு:-*

வினையாற்றும் வேளையில் வேகமும், விவேகமும் தேவை. ஆனால் கோபம் கொண்டால் செயல் நலமுற அமையாது; சினமானது தாம் சேர்ந்தாரையும் தம்மைச் சேர்ந்தாரையும் அழிக்கவல்லது; சினம் இறக்கக் கற்று வையம் தழைக்க வாழவேண்டும்.

96. *மேனாட்டார் வியந்து நோக்கும்*
*மேன்மையுள்ள பக்தி நாடே*
*வானோட்டும் எந்தி ரங்கள்*
*வளர்ந்த அணுச் சக்தி நாடே*
*கோனாட்சி எல்லாம் மாறி*
*குடியாட்சி மலர்ந்த நாடே*
*மீனாட்சி உன்னைச் சேர்ந்தே*
*உயிரூட்டும் சக்தி நாடே*

பொருள்:-

மேலை நாட்டவர் எல்லாம் வியப்புடன் பார்க்கும் மேன்மையும், பிறநாட்டில் இல்லாத அளவில் ஆன்மீகச் சிறப்பும் கொண்ட நாடு ; வானமண்டலத்தில் இயங்குகின்ற பல ஆற்றல் மிக்க விண்கலங்களை ஏவியும், அணு அயுதங்க ளைக் கண்டறிந்து வளர்ச்சியடைந்த ஆற்றல் மிக்கநாடு, பண்டைய மன்னராட்சி முறை மறைந்து மக்களாட்சி மலர்ந் துள்ள நாடு; சிவபெருமானே! மீனாட்சி தேவி உன்னுடன் சேர்ந்து உயர்வு பெறச் செய்யும் நாடு, இந்திய நாடல்லவா!

தெளிவு:-

பக்தியாலும் சக்தியாலும் பார்போற்றத் திகழ்வதுடன், கல்வி, அரசியல், பொருளாதாரம் , அறிவியல் தொழில் நுட்பம், விளையாட்டு, மக்கள் தொகை முதலான துறைகளில் முதன்மை பெற்றிருக்கும் நாடு; இலக்கியச் செல்வங்கள் நிறைந்த ஏற்றமிக்க நாடு இந்தியா.

97. *உயிரில் கலந்து நாளும்*
*உயர்வை விதைத்தவன் யார்?*
*பயிரில் நிறைந்த பச்சை*
*நிறத்தைக் கலந்த வன்யார்?*
*அயர்வைப் போக்கும் காற்றுக்*
*காற்றல் தந்த வன்யார்?*
*வியர்வை பூக்கும் நெற்றிக்*
*கண்ணன் நிமலன் தானே!*

பொருள்:-

உலகில் வாழும் உயிர்களுக்கு உயிரோடு உயிராகக் கலந்து நின்று நாள்தோறும் உயர்வைப் பெற வழி வகுப்பவன்; நிலத்தில் விளையும் பசுமை நிறைந்த பயிர்களில் பச்சை நிறத்தைக் கலந்தவன்; உழைத்துக் களைத்துவரும் உழைப்பாளியின் அயர்வினைப் போக்க வல்ல ஆற்றலைக் காற்றுக்கு அளித்தவன்; யார் என்றால் வியர்வைத்துளிகள் பூக்கும் இடமான நெற்றியிலே கண்களைப் பெற்றிருக்கும் களங்கமற்றவனான சிவபெருமான் தானன்றோ ?

தெளிவு:-

ஊனாகி உயிராகி உலகமெல்லாம் செழித்திருக்கத் தானாகிப் பலவகைப் பயிராகித் தண்ணளியைத் தருகின்ற, வானாகி வளியாகி வாழ்வளிக்க, உலகோர்க்குக் கோனாகி நிற்கின்ற எம்பெருமான் திருவடியைப் போற்றுகின்ற பேறு பெற்று உய்கின்ற நானாகி நலம்பெறவே நாயகனை வேண்டுகிறேன்.

98. *ஏச்சிலே உள்ளம் நொந்தே*
*எரிமலை வெம்மை தாங்கி*
*மூச்சிலே வெளிப்ப டுத்தும்*
*மூர்க்கனாய் மாறி டாமல்*
*பேச்சிலே கனிவைக் காட்டிப்*
*பெரும்புகழ் கூட்டி வாழ*
*நாச்சியார் கோவே! நீர்தாம்*
*நலம்பல வழங்கவேண்டும்.*

*பொருள்:-*

பிறர் தூற்றிப்பேசும் ஏளனப்பேச்சுக்களில் உள்ளம் வேதனையுற்று, வெதும்பி எரிமலைபோன்ற வெப்பத்தை மூச்சுக்காற்றிலே வெளிப்படுத்துகின்ற வன்மையான நெஞ்சம் கொண்டவனாய் எளியேன் மாறிப்போகாமல் எல்லாரிடமும் பேசுகின்ற பொழுது அன்பையும், கனிவையும் அவர்கள் உணருமாறு வெளிப்படுத்திப் பேசிப் பெரும்புகழ் பெற்றுயான் வாழ அன்னை மயிலம்மையின் தலைவனான எந்தையே! நீர் தாம் நன்மைகள் பல புரிந்து நல்வழியைக் காட்டவேண்டும்.

*தெளிவு:-*

இகழ்வாரைத் தாங்கும் பண்பு எவர்க்கு வாய்க்கிறதோ? அவர் புவியாளும் பொறுப்பினை ஏற்கத் தகுதிபெற்றவராவர். பிறிதோரிடத்தில் பெற்ற துன்பத்தின் விளைவாக வேறொருவரிடத்தில் வெடிக்கும் எரிமலையாவர் சிலர். அக்குணம் நீக்கி அன்பு வழி சென்றால் அகிலமே வியந்து போற்றும்.

99. *வேண்டுவார் வேண்டல் வேண்டி*
*விறகினைச் சுமந்த நல்லோய்!*
*மூண்டநல் கோபத் தாலே*
*மாரனை எரித்த வல்லோய்!*
*தாண்டவ வேட்கை தீரத்*
*தாருகா வனத்தைத் தேர்ந்தோய்!*
*கூண்டினுள் குருளை போன்றென்*
*குறைகளைத் தீர்ப்போய்! போற்றி!*

பொருள்:-

மதுரையிலே இசைவாணர் பாணபத்திரரின் வேண்டுதலைக் கேட்டு, அவர்க்கு உதவ விரும்பித் தள்ளாத முதியவர் வடிவில் விறகினைச் சுமந்த நல்லவனே! காமனின் அடாத செயல்கண்டு, சினம் கொண்டு நெற்றிக் கண்ணால் அவனை எரித்த வல்லவனே! நின் பலவகைத் தாண்டவங்களாலும், நடனங்களாலும் களைப்புற்று நீர் வேட்கை கொண்டதால் அதைத் தணிக்கும் பொருட்டுக் காவிரித் தென்கரையில் தாருகாவனத்தைத் தேர்ந்தெடுத்து வீற்றிருக்கின்றாய்!

இறைவா! கூண்டினுள் அடைபட்டுக் கிடக்கும் சிங்கக் குருளையைப் போன்ற என்னுடைய குறைகளைப் போக்கி அருள் புரிவாயாக!

தெளிவு :-

எளியவர்க்கு இன்முகத்தோடு இரக்கம் காட்டும் பண்பும், தகாத செயல்களைச் செய்வாரைக் கண்டிக்கும் திறமும், உழைத்துக்களைத்த வேளை ஓய்வெடுத்தலும் இறைவன் செயல்களால் உணரப்பெறும்.

*100. போற்றியே நெற்றிச் செங்கண்*
*பூத்திடும் பொறியே! வெற்றி*
*சாற்றியே சாந்தம் பூசும்*
*சக்திசேர் மார்பே போற்றி!*
*தூற்றியே பேசும் மாற்றார்*
*தொலைத்திடும் சூலம் போற்றி!*
*காற்றிலே தென்றல் போலத்*
*தாருகேச அருளே சூழ்தி!*

பொருள்:-

எம் பெருமானே! உலகிற்கு ஒளியையும் பாதுகாப்பையும் தருகின்ற நின் நெற்றிக் கண்ணிலிருந்து தெறிக்கும் பொறியினை வணங்குகிறோம். வெற்றிவாகை சூடிப்பறை சாற்றுகின்ற சந்தணம் பூசப்பெற்றுள்ள சக்தி தேவியும் சேர்ந்திருக்கின்ற நின் அழகிய மார்பைப் போற்றுகிறோம். பழித்துப் பேசுகின்ற தீய நெஞ்சம் கொண்ட பகைவர்களை அழிக்கவல்ல ஆற்றல் வாய்ந்த திரிசூலத்தை வாழ்த்தி வணங்குகின்றோம். சுற்றிச் சுழன்று வீசும் காற்றிலே கலந் திருக்கும் தென்றலைப் போலத் திருப்பராய்த்துறையில் எழுந்தருளியிருக்கும் பராய்த்துறை நாதனின் திருவருளே எம்மைச் சூழ்ந்து நிலவட்டும்.

தெளிவு:-

கண்ணிலே கருணையும், நெஞ்சிலே உறுதியும் கையிலே வலிமையும் கடவுளுக்கு வேண்டுவதன்று, அனைத்துமாய் நிற்பவர் அவர். மானிடர் தம் வாழ்வில் கொள்ள வேண்டியவை இவை.

## பாடல் முதற்குறிப்பு அகராதி

# பாடல் முதற்குறிப்புத் தொடர்ச்சி



* * *